# கல்வெட்டு



தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் காலாண்டு இதழ்
இதழ் 21 ★ ரக்தாட்சி ஆண்டு புரட்டாசித் திங்கள் [10/1984] ★ விலை ரூ 1-

## உள்ளே......



---

அட்டைப் படம்

கோக் கண்டன் வீர நாராயணனின் 8-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு. இதைப் பற்றிய விளக்கத்தைப் பக்கம் 34-இல் காண்க.

# தூங்கு தலைக் கல்

செ. போசு, எம். ஏ.
கல்வெட்டாய்வாளர்
திருமலை நாயக்கர் அரண்மனை, மதுரை.

மதுரையில் இருந்து 30 கி. மீ. தொலைவில் உள்ளது மடப்புரம் என்ற சிற்றூர். இது முகவை மாவட்டம் திருப்புவனம் வட்டத்தைச் சேர்ந்தது. திருப்புவனத்தில் இருந்து 3 கி மீ. தொலைவில் உள்ளது இச்சிற்றூர். இங்கிருந்து ஆற்றின் குறுக்காகவும் இவ்வூருக்குச் சென்றடையலாம்.

அருள்மிகு அடைக்கலம் காத்த அய்யனார் கோயிலும் காளியம்மன் கோயிலும் ஒரே சுற்றடைப்பில் இவ்வூரில் காணப்படுகின்றன. காளியம்மன் வழிபாடு இங்குள்ள மக்களாலும் சுற்றுப்புற மக்களாலும் அண்மைக் காலங்களில் புகழ்பெற்று வரத் தொடங்கியுள்ளது.

அண்மையில் இக்கோயில் பார்வையிடப்பட்டபோது, நவகண்டம் கொடுத்ததற்கான இரண்டு கல்வெட்டுக்கள் (வட்டெழுத்து, தமிழ்) இங்கிருப்பது கண்டறியப்பட்டது.

அய்யனார் கோயிலில், கன்னிமார் எழுவரில் வராகி தவிர பிற சிற்பங்கள் உள்ளன. சிற்ப அமைதியை நோக்குமிடத்து இவை கி.பி. 8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை எனக் கொள்ளலாம். முற்காலப் பாண்டியர் காலத்தவை. சிவன் உமையோடு காணப்படுகின்றார்.

அய்யனார் கோயில் கருவறைக்குள் நுழையும் நுழைவாயிலில் இருபுறமும் வாயிற்காவலர்கள் போன்று இரண்டு சிற்பங்கள் வைக்கப்பட்டுள்ளன. இவற்றில் கல்வெட்டு காணப்படுகிறது.

### வலப்புறம்

வலப்புறம் உள்ள சிற்பத்தின் தலைக்குமேல் இரண்டு வரிகள் உள்ளன.

'தூங்கு தலை குடுத்தான்
சித்திர சரிதன்'

இது கி.பி. பத்தாம் நூற்றாண்டைச் சேர்ந்த எழுத்தமைதியோடு காணப்படுகிறது. தமிழ் எழுத்துக்களால் எழுதப்பட்டுள்ளது.

வீரனொருவன் இடது காலை மண்டியிட்டு, வலது முழங்காலைத் தரையில் வைத்து இடக்கையால் தம் குடுமியைப் பிடித்து, வலக்கையில் பிடித்துள்ள கத்தியால் தம் தலையை அறுக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளான். குடுமிபிடித்த கையின் முன் வளைப்பகுதி சிறிது உடைந்துள்ளது.

இடப்புறம்

இடப்புறம் வைக்கப்பட்டிருக்கும் சிற்பத்தில் காட்டப்பட்டிருக்கும் வீரன் வலது காலை மண்டியிட்டு, இடது முழங்காலைத் தரையில் வைத்து, இடது கையால் தமது குடுமியைப்பிடித்து வலக்கையில் பிடித்துள்ள கத்தியால் தம் தலையை அறுக்கும் நிலையில் காட்டப்பட்டுள்ளான். இடைக்கச்சு காணப்படுகிறது. தலையின் மேல் பகுதி சிதைந்துள்ளது.

இங்கு கி.பி. எட்டாம் நூற்றாண்டைச் சேர்ந்த வட்டெழுத்துக் கல்வெட்டு இரு வரிகளில் காணப்படுகின்றது

'தூங்கு தலை குடுத்தான் . . .
வல்லபன்'

'தூங்குதலை' என்ற சொல் இக்கல்வெட்டில் வருவது நோக்கத்தக்கது.



---

# களப்பிரர் கல்வெட்டு

கோவை மாவட்டம் வெள்ளலூரில் இரண்டு களப்பிர மன்னர்களின் கல்வெட்டுகளைத் தமிழ்நாடு அரசுத் தொல்பொருள் ஆய்வுத்துறை புதிதாகக் கண்டுபிடித்துள்ளது. வெள்ளலூர் சிவன் கோயிலின் திருச்சுற்றுப் பகுதியில் புதையுண்டிருந்த 10-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த இக்கல்வெட்டுகளில் ஒன்று வட்டெழுத்திலும் மற்றொன்று தமிழ் எழுத்திலும் உள்ளன.

தமிழில் எழுதப்பட்ட கல்வெட்டு கோக்கண்டன் வீரநாராயணனின் 12-ஆம் ஆட்சியாண்டைச் சார்ந்தது. மற்றொன்று ...... பன்மர் என்ற மன்னனின் 12-ஆம் ஆட்சியாண்டில் எழுதப்பட்டது. வெள்ளலூரைச் சேர்ந்த தென்னூரில் உள்ள சிவன் கோயிலுக்கும், அம்மன் ஆலயத்திற்கும் நந்தா விளக்கு எரிப்பதற்குக் கொடையாக நிலமும், பொன்னும் அளித்த செய்தியை இக்கல்வெட்டுகள் குறிக்கின்றன. இக்கல்வெட்டுகளில் குறிக்கப்படும் கோக்கண்டன் வீரநாராயணன் ஒரு களப்பிரமன்னன் என்றும்,இவனும் கோக்கண்டன் ரவியும் உடன் பிறந்தார் என்றும் திரு நடன. காசிநாதன், இயக்குநர் (பொறுப்பு) அவர்கள் தம் 'களப்பிரர்' என்னும் நூலில் குறிப்பிட்டுள்ளார்கள்.

—பொ. இராசேந்திரன்

# மேல்சேவூர் செப்பேடு

பா. கண்ணையன்

தற்போது இச்செப்பேடு தென்னாற்காடு மாவட்டம் செஞ்சி வட்டம் மேல்சேவூர் அருள்மிகு ரிசபபுரிநாத ஈச்சுரர் ஆலயத்தில் உள்ளது. இச் செப்பேட்டில் மன்னன் பெயர் குறிப்பிடப்படவில்லை. மன்னனின் ஆட்சி யாண்டோ அல்லது சகாப்தமோ குறிப்பிடவில்லை. சாருவரி ஆண்டு சித்திரை மாதம் என்று மட்டும் குறிப்பிடப்பட்டுள்ளது அதைக்கொண்டு இந்தச் செப்பேடு எழுதப்பட்டு எத்தனை ஆண்டுகள் ஆகின்றதெனக் கணக்கிட இயல வில்லை.

ஆனால் இந்தச் செப்பேட்டுச் செய்தியில் "அகோர சிவாச்சாரியார்" என்பவர் குறிப்பிடப்பட்டுள்ளார். அகோர சிவாச்சாரியார் அதிவீரராம பாண்டியரின் தீட்சாகுரு ஆவார். அதிவீரராம பாண்டியரின் காலம் 16-ஆம் நூற்றாண்டு. அதாவது கி.பி. 1565. ஆகவே அகோர சிவாச்சாரியாரின் காலமும் அதுவேயாகும். இதைக்கொண்டு பார்க்குமளவில் இந்தச் செப்பேடு எழுதப் பட்ட காலமும் 16-ஆம் நூற்றாண்டு ஆகும். அதாவது சுமார் 400 ஆண்டு களுக்கு முன்னர் எழுதப்பட்டதாகும்.

மேலும் மேற்படி செப்பேட்டில் குறிப்பிடப்பட்டுள்ள உலகமாதேவி புரம் செட்டிகள் என்பவர்கள் திண்டிவனம் வட்டத்திலுள்ள, தற்போது உலகாபுரம் என வழங்கப்படும் ஊரைச்சேர்ந்த பெருமக்களாவர். இந்த இனத்தவர்கள் தற்போது திண்டிவனம் வட்டத்திலுள்ள உலகாபுரம், திண்டி வனம், செஞ்சி வட்டத்திலுள்ள மேலச்சேரி ஆகிய ஊர்களில் வாழ் கின்றனர்.

இச்செப்பேட்டில் குறிப்பிடப்பட்டுள்ள செய்திகளால் 16-ஆம் நூற் றாண்டில் சைவ ஆச்சாரியர்களும், வைணவ ஆச்சாரியர்களும் சமய வேறுபாடு கருதாமல் ஆலயங்களில் வழிபாடு செவ்வனே நடைபெற ஏற்பாடுகள் செய் தனர் என்பது தெரியவருகிறது.

## செப்பேடு

முதல் பக்கம்

அரோ சிவன்பாதமே துணை. சிவ தர்மம்.

1 சாருவரி சித்திரை மாத முதல் ஸ்ரீமன் சிதம்பரம் பதஞ்சலியாரா

2 சிரமான மேலைமடம் பிட்சாமடம் அகோர சிவாசாரியார் சுவாமியார

3 வர்களும் திருக்கண்ணபுரம் எச்சராய்யா ஆசாரியரவர்களு
மிருவரும

4 ராய் தங்களுட சிஷாக்களான உலகமாதேவிபுரம் செட்டிகளான
யிருப்த்து

5 னாலு கோத்தரத்தார் எங்களனவரையும் அழைப்பித்து உங்க
ளுக்கு

6 முன்னாலே வந்த ஆபத்துக்கு யிரங்கி தாமுமொரு செட்டிக
ளோடே

7 செட்டியாய் வந்து விவகாரத்துக்கு தாமாய் முன்னிண்ணுக்கொ

8 ண்டு வந்த ஆபத்தைதெ(டு)த்துக் குடுத்து சிறைமீட்டுக் குடுத்த
சேலூர் யி

9 ரங்கி மீட்ட சுவாமியாருக்கு முன்னாலே அபிஷேகம் நெய் வே

10 வதன்ம் திருவிளக்கு தேர்திருவிழா எல்லாக்காரிய

11 மும் நடக்கத்தக்கதாக நடத்திக் கொண்டு வந்த நீங்க

12 ளந்தப்படிக்கு யிப்பமும் நடந்து வரத்தக்கதாக நடத்

13 திக்கொண்டு வராமலிருப்பானேன் என்று திருவிளம்

14 பத்தின விடத்திலே தாங்கள் யிருபத்துனாலு கோ

15 த்திரத்தாரனவரும் தெண்டம் பணி விண்ணப்பம்

16 செயிது முன்னாலே யிரங்கி மீட்ட சுவாமியாருக்கு

17 அபிஷேகம் நிவேதனம் திருவிளக்கு தேர் திருவி

18 ழா எல்லாக் காரியமும் நடந்தபடிக்கு யிப்

19 பவும் நடந்து வரத்தக்கதாக அதுகாரியத்து

20 க்கு எப்படி எத்தனம் பண்ண வேண்டிய தெ

2-ஆம் பக்கம்

21 ா அதுகாரியத்துக்கு சுவாமியாரவர்கள் எ

22 ந்தப் படிக்கு புத்தி கட்டளை யிட்டுதோ அந்த

23 ப்படிக்குக் கேழ்க்குறோ மென்று விண்ணப்பஞ்

24 செய்தபோது சுவாமியாரவர்கள் கட்டளை

25 யிட்ட விபரம் யிருபத்துனாலு கோத்திரத்தார

26 னவருக்கு ஒரு ஒரு தலைக்கட்டு வருஷ வருஷத்துக்

27 கு அரைப்பணமும் ஒவ்வொரு கலியாணத்துக்கு முகுர்த்

28 ததிலே அஞ்சு அஞ்சு பணமும் தானப்பணம் ஒண்ணு

29 ஒவ்வொரு திருச்சினத்துக்கு ஒவ்வொரு பணமும் யிப்

30 படியாய் பணம் வாங்கிக் கூட்டிக் கூடின பணத்துக்கு சே

31 சலூர் யிரங்கி மீட்ட சுவாமியாருக்கு அபிஷேகம் நெய்வே

32 தன நெய் விளக்கு தேர் திருவிழா யிந்தக் காரியமெல்

33 லாம் முன்போல நடந்து வரத்தக்கதாக நடத்திக்கொ

34 ண்டு வாருங்கோ ளென்று யிப்படிக்கு கட்டளை யிட்டார்
35 கள் அந்தப்படியே பணம தண்டல் பண்ணி பணம் வ
36 ாங்கி சிவதர்மம் நடந்து வருகுர காரியத்திலே யிந்த சிவத
37 ர்ம கட்டளைக்கு யிருபத்துவாலு கோத்திரத்தாரன வருக்குள்
38 ளே யாதா மொருவர் விகாதம் பண்ணினவர் யாவரோ
39 அவர்கள் குருமொழி மரந்த சிஷன்[1] எந்த தோஷத்தி
40 லே போவார்களோ அந்த தோஷத்திலே போவார்கள். உ

1. 'சிஷ்யன்' என்று இருத்தல் வேண்டும்.



# கற்கால ஓவியங்கள் கண்டுபிடிப்பு

அண்மையில், தருமபுரி மாவட்டம் கிருஷ்ணகிரி அருகே மல்லசமுத்திரம் என்ற ஊரில் 1500 ஆண்டுகளுக்கு முற்பட்ட பெருங்கற்காலக் கல் திட்டைகளில் தொல்பழங்கால ஓவியங்களைத் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை கண்டு பிடித்துள்ளது. பலகைக் கல்லில் காணப்படும் இவ்வோவியங்களில் ஒன்றைத் தவிர பிற யாவும் வெள்ளை வண்ணத்தில் தீட்டப்பட்டிருக்கின்றன. சுற்றுவேலியினுள் மரம், ஒளி வீசும் கதிரவன், மனிதனின் கால் முதலியன குறிப்பிடத்தக்கன. மேலும் அம்பும், வில்லும் ஏந்தி குதிரைமீது அமர்ந்த மனித உருவங்களும், கத்தியும், கேடயமும் கொண்ட வீரர்களின் உருவங்களும் சிறப்பானவை. அத்தோடு நீண்ட பெரிய விலங்கின் மீது நிற்கும் வீரனின் ஓவியமும், புலிமீது அமர்ந்து அதை அடக்கும் மற்றொரு வீரனின் ஓவியமும் குறிப்பிடத்தக்கவை.

—சு. சம்பத்

# வீரபாண்டிச் செப்பேடு

இரா. ப. கருணானந்தன்
*இராசராசசோழன் அருங்காட்சியகக் காப்பாளர், தஞ்சாவூர்*

மதுரையிலிருந்து கம்பம் செல்லும் சாலையில் தேனிக்கு அருகில் உள்ள ஊர் வீரபாண்டி. சுருளியாறு என்னும் முல்லையாற்றங்கரையில் அமைந்த வளமிக்க அழகிய ஊர். மதுரை மாவட்டத் தென்மேற்குப் பகுதி மக்களின் கண்கண்ட தெய்வமாகிய மாரியம்மன் கோயில் கொண்ட ஊர் வீரபாண்டி.

## வீரபாண்டிச் செப்பேடு

இவ்வூர் மாரியம்மன் பெயரில் செப்பேடு ஒன்று உள்ளது. 34.5 செ.மீ. நீளமும், 22.5 செ.மீ. அகலமும் உள்ளது. செப்பேட்டின் தலைப்பில் சிறிய துளை ஒன்று உள்ளது. தலைப்பகுதியில் வலப்புறம் சக்கரம், இடப்புறம் சங்கு, நடுவே நாமம் முதலியன வரையப்பட்டுள்ளன. இச்செப்பேடு தற்போது போடிநாயக்கனூரில் வசிக்கும் அரியணன் புல்லன் பெத்தணன் செட்டியார் வமிசத்தாரிடம் உள்ளது. பிற செப்பேடுகளைப் போல் அல்லாமல் மெய்யெழுத்துக்களின்மேல் புள்ளிகள் வைக்கப்பட்டுள்ளன. எனவே பிற் காலத்தில் தெளிவாகப் படிக்கவேண்டுமென்பதற்காகப் புள்ளிகள் வைக்கப் பட்டிருக்கலாம். அல்லது மூலத்தைப் பார்த்து தற்போது உள்ள செப் பேட்டில் பெயர்த்து எழுதியிருக்கலாம். எது எப்படியிருந்தாலும் இச் செப்பேடு வீரபாண்டி மாரியம்மன் கோயிலைப் பற்றிய பல வரலாற்று உண்மைகளைத் தெளிவுபடுத்துகிறது. செப்பேட்டுச் செய்தி மாரியம்மன் கோவில் முன்னுள்ள கல்லிலும் எழுதப்பெற்றது என்றும் செப்பேடு தெரிவிக் கிறது. [வரி 58]

## செப்பேடு வழங்கியவர்

செப்பேடு வழங்கப்பட்டதாக இரண்டு ஆண்டுகள் உள்ளன. ஒன்று சக ஆண்டு 1490. மற்றது கலி ஆண்டு 4669. எனவே செப்பேடு வழங்கப் பட்ட கி.பி. ஆண்டு 1568 ஆகிறது. செப்பேட்டில் தமிழ் ஆண்டு சுக்கில வருடம் என்று உள்ளது. ஆனால் சுக்கில வருடம் என்பது 1569-இல் வந்திருக்கவேண்டும். செப்பேட்டை வழங்கியவர் கோடியம் நாகம நாயக்கர் குமாரன் விசுவநாத நாயக்கன் என்று செப்பேடு தெரிவிக்கிறது ஆனால் விசுவநாத நாயக்கருடைய ஆட்சி கி.பி 1529 முதல் 1564 வரை.* எனவே செப்பேட்டில் காலத்தைப் பொறுத்தவரை இரண்டு தவறுகள் காணப் படுகின்றன. இத்தவறுகள் இரண்டும் எழுதியவர்கள் செய்த தவறாகக் கொள்ளலாம்.

விசுவநாத நாயக்கன் காலத்தில் கம்பம் கூடலூர்ப் பகுதியில் போர் ஒன்று நடைபெற்று உள்ளது.[3] அப்போருக்காகச் சென்று திரும்பியபோது விசுவநாத நாயக்கன் வீரபாண்டி மாரியம்மனுக்கு இச்செப்பேட்டை வழங்கி இருக்கவேண்டும். புல்லை நல்லூருக்கு (வீரபாண்டி) வருகை புரிந்த விசுவநாத நாயக்கன் அவ்வூரில் பாண்டியனால் அமைக்கப்பட்ட சிவன் கோயிலைப் பார்வையிடுகிறான். அந்த ஈச்வரன் பாண்டியனுக்குக் கண்கொடுத்த வரலாற்றையும் அறிகிறான். மேலும் அந்த ஊரில் கோயில் கொண்டுள்ள மாரியம்மன் தேகநோய், சகல பிணி பாவங்களை நீக்குவதோடு அறுந்த தலைகளைப் பொருந்தச் செய்யும் அதிசயத்தையும்[4] கண்டு வியந்து விசுவநாத நாயக்கன் இச்செப்பேட்டுக் கொடையை வழங்கியதாகச் செப்பேடு தெரிவிக்கிறது [வரி:30-36].

## கொடையைப் பெற்றவர்

போடிநாயக்கனூர் பகுதியில் 24 மனை தெலுங்கு செட்டியார் என்று ஒருவகைப் பிரிவினர் உள்ளனர். இவர்கள் விசயநகர ஆட்சிக் காலத்தில் தென்பகுதியில் வந்து குடியேறியவர்கள். இவர்களில் 8 வீடு, 16 வீடு என்று இரு பிரிவுண்டு. 16 வீட்டுக்காரர் அனைவரும் சகோதரர். 8 வீட்டார் இவர்களுக்குச் சம்பந்தி முறை. 8 வீட்டாரின் குடியேற்றம் பழனி செட்டிய பட்டி, வயப்பட்டி, வீரபாண்டி முதலிய ஏழு கிராமங்களில் நடைபெற்றது. தாசுசெட்டி மக்கள் ஐவர். இவர்கள் புல்லன் செட்டி, அரியணன் செட்டி, தாசு செட்டி, வெகுமாறி செட்டி, பெத்தணன் செட்டி முதலியோர். இவர்கள் வமிசம் வடக்கே கண்ணனூரிலிருந்து தென் தமிழகம் நோக்கி வரும்போது மதுரை வந்து தங்கி பின்னர் வைகை ஆற்றங்கரையில் வந்து குடியேறுகின்றனர். அவ்வாறு அவர்கள் வரும்போது தங்கள் குலதெய்வமாகிய மாரியம்மனையும் உடன் கொண்டுவருகின்றனர். இவர்களே 24 மனை தெலுங்கு செட்டியாருள் அடங்கும் 8 வீட்டார். தாசு செட்டி மக்களுள் மூத்தவராகிய புல்லன் செட்டி என்பவர் புல்லை நல்லூரை (வீரபாண்டி) அமைத்து, ஊரின் மத்தியில் தாங்கள் கொண்டு வந்த மாரியம்மனை லிங்கமாக அமைக்கின்றார். [வரி: 19-25] பின்னர் கோவிலும் கட்டப்படுகிறது. அவ்வழியாகச் சென்ற விசுவநாத நாயக்கன் அம்மனின் ஆற்றலை அறிந்து இக்கொடையை மேற்படி தெலுங்கு செட்டியார் வமிசத்தார்க்கு வழங்கிச் செல்கிறான்.

அக்காலம் முதல்கொண்டு மாரியம்மன் கோவில் நிர்வாகமும் பூசாரிப் பொறுப்பும் இந்த தெலுங்குச் செட்டியார் வசமே இருந்தது. மாரியம்மனை குலதெய்வமாகக் கொண்ட இவர்களுக்கு மயிலாடும்பாறை பால்வண்ணசுவாமி கோயிலும், ஏழுமலைக்கு அருகில் உள்ள மல்லப்புரம் பெத்தண சுவாமி கோயிலும் குலதெய்வமாக உள்ளன. செப்பேடு இவர்களை யாகச் சத்திரிய தெலுங்க தேசாதிபதிகள் என்று அழைக்கிறது [வரி: 13-14].

## புல்லை நல்லூர்

வீரபாண்டி முல்லையாற்றங்கரையில் கண்ணீச்வரமுடையார் என்னும் பிற்காலப் பாண்டியர் கோவில் ஒன்று உள்ளது. இக்கோவிலில் ஆறு கல்வெட்டுக்கள் 1907-ஆம் ஆண்டு கல்வெட்டு அறிக்கையில் வெளிவந்துள்ளன.

பிற்காலப் பாண்டியர்[4] கலை செப்புத்திருமேனிகள் சில கோவிலுக்கு முன்பு புதைந்து கிடந்து சில ஆண்டுகளுக்கு முன்னர் வெளிப்பட்டதும் குறிப்பிடத் தக்கது[5] இக்கல்வெட்டுக்களைப் பற்றி "பாண்டியனால் சிவனாலையத்தில் கல்லில் சில விபரமிருக்கு" என்று செப்பேடும் தெரிவிக்கிறது. இக் கல்வெட்டுக்களுள் ஐந்து சுந்தரபாண்டியன், விக்கிரமபாண்டியன், வீரபாண்டியன் என்ற பிற்காலப் பாண்டியர்கள் காலத்தன.[6] ஒன்று மட்டும் சக ஆண்டு 1451 விசயநகர அரசர் கிருட்டினதேவ மகாராயர் காலத்தது[7] இக்கல்வெட்டுகள் அனைத்தும் கண்ணீச்சுரமுடையாரையே குறிப்பிடுகின்றன. மாரியம்மன் கோயிலைப் பற்றி ஒன்றும் தெரிவிக்கவில்லை. இக்கல்வெட்டுகள் அனைத்தும் ஊர்ப் பெயரை புல்லை நல்லூர் என்று ஒருமித்த குரலில் தெரிவிக்கின்றன. எனவே பிற்காலப் பாண்டியர் காலத்தில் அளநாட்டில் ஓர் ஊராகத் திகழ்ந்தது புல்லை நல்லூர் ஆனால் விசய நகரக் கிருட்டின தேவராயர் கல்வெட்டு இவ்வூரை வீரபாண்டிய நல்லூர் என்ற மற்றொரு பெயரிலும் அழைக்கிறது.[8] எனவே பாண்டியர் காலம் வரையிலும் புல்லை நல்லூர் என்று அழைக்கப்பட்டு வந்த இவ்வூர் விசயநகரக் காலம் தொடங்கி வீரபாண்டிய நல்லூர் என்று இரு பெயராலும் அழைக்கப்பட்டு பின்னர் புல்லை நல்லூர் என்னும் வழக்கு மறைந்து தற்போது வீரபாண்டி என்று ஆகியிருத்தல் வேண்டும் என்று முடிவு செய்யலாம்.

பாண்டியர் காலம் வரை அளநாடு[9] என்று அழைக்கப்பட்டு வந்த பெரியகுளம் உத்தமபாளையம் வட்டங்கள் விசுவநாத நாயக்கன் காலத்தில் மேல் சாரங்க பூமியில் வெங்கலப் பிரமலை வளநாடு என்று மாற்றம் பெறுகின்றன [வரி: 10 11]. மாரியம்மன் கோயில் செப்பேடும் இவ்வூரைப் புல்லை நல்லூர் என்றே தெரிவிக்கின்றது. மேலும் இவ்வூர் இருப்பிடத்தை "சேர நாட்டு எல்லைக்கும் வள்ளல்நதி என்னும் வருசை நாட்டுக்கும் மத்தியில் வருகிற சுருளி நதி வைகையையடுத்து தெற்கிருக்கும் புல்லை நல்லூர்" என்று அழகாகத் தெரிவிக்கிறது [வரி: 11 12].

### வீரபாண்டி மாரியம்மன்

கண்ணீச்சுரமுடையார் கோயில் கல்வெட்டுகள் ஒன்றுகூட மாரியம்மன் கோயிலைப் பற்றித் தெரிவிக்கவில்லை. கி.பி. 1529-இல் பொறிக்கப்பட்ட விசயநகரக் கிருட்டினதேவ மகாராயர் கல்வெட்டும் மாரியம்மனைப்பற்றித் தெரிவிக்கவில்லை. எனவே, கி.பி. 1529 வரை மாரியம்மன் கோயில் அங்கு உருவாக வில்லை. எனவே செப்பேடு தெரிவிப்பதைப்போல விசுவநாத நாயக்கன் காலத்தில் கி.பி. 1568-ஆம் ஆண்டு வாக்கில் வீரபாண்டி மாரியம்மன் கோயில் கட்டப்பட்டிருக்க வேண்டும் என்ற முடிவுக்கு வரலாம்.

24 மனை தெலுங்குச் செட்டியாரில் ஒரு பிரிவினர்க்கு மட்டுமே குல தெய்வமாக விளங்கிய மாரியம்மனின் அருமை பெருமைகளை விசுவநாத நாயக்கன் அறிந்து கொடை நல்கியவுடன் அனைத்துச் சமுதாயத்தினரும் போற்றி வழிபடும் தெய்வமாக மாற்றம் பெற்றிருக்கவேண்டும்.

செப்பேடு மாரியம்மனை ஆயிரங்கண்ணுடைய கௌமாரியம்மாள் என்று அழைக்கிறது [வரி: 35]. சகல பிணி பாவங்களை நீக்குவதோடு அறுத்

தத் தலைகளைப் பொருந்தச்செய்யும் வல்லமை பெற்றவளாக இவ்வம்மையைச் செப்பேடு விவரிக்கின்றது [வரி 33-34]. கோவில் தொடங்கப்பட்டநாளில் சித்திரை மாதத்தில் முதல் செவ்வாய் தொடங்கி 22 நாட்கள் வரை அம்மனை வழிபட்டிருக்கின்றனர். செவ்வாய் முதல் நாள் அத்திமரத்து முக்கவர் கம்பம் நட்டு, அதற்கு முல்லையாற்றிலிருந்து தண்ணீர் கொணர்ந்து ஊற்றி தாலி சேலைகள் வைத்து வழிபட்டிருக்கின்றனர் [வரி 27-30].

1568-ஆம் ஆண்டு தொடங்கி வழிபாடு பெற்றுவரும் வீரபாண்டி மாரியம்மன் இன்று மதுரை மாவட்டத்து மக்களின் கண்கண்ட தெய்வமாக அருள் பாலித்து வருகின்றாள். நேர்த்திக்கடன் செலுத்த வேண்டியவர்கள் சித்திரைத் திருவிழாத் தொடங்குவதற்குச் சில நாட்களுக்கு முன்பாக தாரை, தப்பட்டைகள் முழங்க காவடி எடுத்தும், தீச்சட்டி ஏந்தியும் ஊர்தோறும் சென்று காணிக்கை பெற்று அக்காணிக்கையை அம்மனுக்குச் செலுத்தி வரும் மாட்சி கண்கொள்ளாக் காட்சி.

செப்பேடு:

1 சாலியவாகன சகாப்தம் 1490 கலியுகாதி 4660 க்குச்சரி

2 யா னிகளும் தமிள் சுக்கில ஹு மாசிமீ 6 உ யன்று நெடிய கடல் சூள்ந்

3 த உலகத்தில் மதுறைக்கரசராகிய ராஜாதிராஜ ராஜமார்த் தண்டன்வில்லுக்கு விஜய

4 ன் சொல்லுக்கு அரிச்சந்திரன் குடைக்கி கற்னன் சந்திர குல சேகரன் சத்துறு சங்கார

5 வீராதிவீரன் வீரகண்டாமணி பொற்கிரீட சக்ரவர்த்தியாக டெப்பை யெளு

6 பத்திரண்டு அரசர்களும் பணியப்பெற்ற நீர்வழும் நிலவழத்திற் சிரந்த வைகைந

7 தி வாசமான மதுரை மீனாக்ஷி சுந்தரேஸ்பரர் பக்த்தரான கோடியம் நாகமநாயக்

8 கரவர்கள் திவ்விய குமாரன் ராஜாதிராஜர் மகாமண்டலேஸ்பர ராகிய விசுவநாத

9 நாயக்கரவர்கள் திவ்விய மநோகரப்படி யெளுதிக்கொடுத்த செம்புப்பட்டயம் யெ

10 ன்னவென்றால் யென் மதுரை யெல்கையைச் சேர்ந்த மேல் சராங்கபூமியில் வெ

11 ங்கலப் பிரமலை வழநாட்டில் சேரநாட்டு யெல்லைக்கும் வழ்ழல் நதியென்னும் வ

12 றுசை நாட்டுக்கு மத்தியில் வறுகிர சுறுளிநதி வைகையை யடுத்து தெற்கிருக்கும் புல்ல

13 நல்லூரான வழநாட்டில் குடியிருக்கிர காமாக்ஷியம்மன் பக்த்த ராகிய யாகச்சத்ரிய தெ

14 லுங்க தேசாதிபதிகள் வம்மிசத்தார்கள் தலமை புல்லன் செட்டிக்கி வுங்கள் முன்னோ

15 ர்கள் காலந்தொட்டு வுங்களுக்குள் கட்டுப்பட்டு சத்தியங் காப் பாற்றும் வண்ணா

16 ன் அம்பட்டன் சாம்பான் வகைகீழ் குலத்தார்கள் வேலைகளுக் குள்ளாக்க கட்டு

17 ப்பட்ட ஜாதியார்களுக்கும் ஜாதியாசார தேச விசாரணைகள் செய்து ரட்ணக்கம்

18 பழிபிடிசெம்பு கம்பழிக்கயர் கோலும் பெற்று நடத்திவறுகின்ற முதன்மை தே

19 சத்தாறான தாசுசெட்டி மக்கள் புல்லன்செட்டி அரியணன் செட்டி தாசுசெட்டி வைகுமா

20 நி செட்டி பெத்தனன் செட்டியென்ற பேர்கள் வைத்து வரா நின்ற வழிவம்ச விருத்தி

21 யான் புல்லன்செட்டி வகையறா முன்னாதியில் வடக்கே கண்ண னூறிலிருந்து கெ

22 ள மாரியம்மனை குலதெய்வமாக வைத்துக்கொண்டு வந்து மதுறையில் தங்கி

23 ப்பின்மேல் சராங்க நாட்டில் தாசுசெட்டி மகன் புல்லன் செட்டி யே மூலபுருசநா

24 க புல்லை நல்லூறையும் கட்டி விசாலமாக வூர்க்கு மத்தியில்தன் குலதேவதை மா

25 ரியம்மன் லிங்கமாக அமைந்துகொள்ள அதன்பின் உன்சிரத்தை யால் அம்

26 மனுக்குக் கோவில் கட்டி அம்மனை தானும் தன் பங்காளிகளும் சம்மந்தகாரர்க

27 ளும் பல குடிகளும் வெள்ளி செவ்வாய் தினங்களில் ஆண்டாண்டு சித்திரை மாச

28 த்தில் செவ்வாய் முதல் 22 நாள் வரைக்கும் குமுளியாய் கும் பிட்டு அத்திமரத்து மு

29 க்கவர் கம்பம் நட்டு தண்ணீர் சுமந்துவூற்றி கண்ணடைக்கம் தாலி சேலைகள் வை

30 த்து கும்பிட்டு வருங்காலத்தில் இதற்கு முந்திய ராஜாங்கத்தாறுக் கும் வேண்டி

31 ய பரிசோதனை வரங்கள் கொடுத்து பாண்டியனுக்குக் கண்ணும் புத்திர பாக்கிய

32 முங்கொடுத்து அவறால் சிவாலையமும் அதற்குவேண்டிய மானுவ பூமிகளும் பெ

33 ற்று யெனக்கும் வேண்டிய வரங்களும் அறுத்தலைகளைப் பொருதச் செய்து உ

34 ள் தேகநோய் சகலபிணி பாவங்களை நீக்கக்கண்ட விசுவநாத நாயக்கரவர்

35 கள் ஆயிரங்கண்ணுடைய கௌமாரியம்மாளுக்கு நான் கொடுக் கும் சீதனமாக (மா)

36 னுவபூமிகள் புல்லை நல்லூறுக்கு தெக்கு மேர்க்கு வடக்கு கிழக்கு நாலுதிக்கிலும் தி

37 க்குக்கு மூனேமுக்கால் நாளிகை தூர சதுரயெல்லைக்குள் ளடங்கிய பூமிக்குள் சுருளிநதி

38 வைகையிருபக்கங்களில் முந்தின ராஜாங்கத்தாறால் உன் முன்வோர்களுக்கும் உன

39 க்கும் கிடைத்தும் கிடைக்கிர முன் பின்னோர்ப்படும் அணைகள் வூரணி கால்வாய் மடா

40 லைய தர்மசாலை ஆலையங்கள் பற்றிய விருச்சங்கள் யாவையும் நீயும் உன்வ

41 ார்சுகள் வகையறா புத்திர பரபௌத்திர பரம்பரையார்களுக்கும் உன் சகோதரன்

42 தாசு செட்டிக்கி இந்த வூர்க்கு மேர்கே சேரநெல்கை ராசிமலைக் கி வடக்கு உன்னால்

43 கட்டிய புல்லனூரனை பாத்யபூமியெல்லை கிழக்கு மரக்கா மலைக்கி மேர்கடியில்

44 தாசு செட்டி வழிநடை தர்மவூரணிக்கி ஒரு னாளிகை வளிதூரச் சதுர பூமியும்

45 விருச்சங்களும் யெக்கால தருமம் நடத்தவும் கொடுத்தேன் உன் சகோதர

46 ன் அரியணன் செட்டிக்கி அவநே மூலபுருசநாக தென்கிழக்கில் சேர நெல்கைக்கிப்

47 பால் வருசை நாட்டு தண்டியலூர் கிராமங்களில் உங்களால் உற்பத்தி குல

48 தேவதைகள் சவரிமலையாண்டி பச்சைமலையாண்டி பெருமாள் சாமி பால் வ [redacted]

49 ண்ண சாமிகளுக்கு வேண்டிய மானுவ பூமிகள் உங்கள் வம்ச கோவிலன் செட்டி வெ

50 ட்டிய கோவிலன் குளம் பஞ்சந்தாங்கி குளம் இது மத்தியில் உள்ள நாலு நாளிகை

51 சதுரவன பூமிகளும் காறகம் பசுப்பெறுக்க நீண்ட பூமி புல்செடி கநி விருச்சங்க

52 ளும் உங்களுக்கு சமுத்திர உப்பாழத்து தலைவு வில்லைச் சேவுகாளும் வழித்துணை தெ

53 ய்வங்கள் இஸ்ட்டப்படி நீங்கள் நடந்து பூசை தர்மங்கள் நடத்தி வரவென்று யேர்

54 ப்பட்டிருக்கும் முந்தின றாஜாங்க நிருபாதாரங்களை நீங்கள் மூன்று பேர்களும் ஒரு

55 தினத்தில் யென்னிடம் ஒப்பிக்க நான்பார்த்து தேவாலைய தர்மங்களையும் ஆனைக்கன்

56 றுகள் நதிகள் 3 ம் யன்று நானும் தே தீர்மானப்படி கொடுத்த செம்புப்பட்ட

57 யம் புல்லை நல்லூர் பக்கம் பாண்டியறால் சிவனாலையத்தில் கல்லில் சில விபரமி

58 ருக்கு இதுமாதிரிக் கல்லில் யெளுதி மாரியம்மன் முன்பக்கத்தில் வைத்துக் கண்பார்த்து

59 நான் வந்து திரும்பி பாண்டி நாடாகிய மதுரைக்கிப் போகிர படியால் இநிமேல்

60 கல்லுங் காவேரி புல்லும் பூமி சந்திர சூரியாள் உள்ளவரை இதிலுள்ள பிர

61 காரம் பொன் தீர்வை நீக்கி உன் வார்சுகளும் அனுபவித்துக் கொள்ளவும் யென

62 க்குப் பின் றாஜாங்கத்தார்கள் யிதைப் பார்த்தாலும் இதுக்கு யாது தடையன்னி

63 யில் உங்க வார்சுகளுக்கு விடாதபடி தடுத்து மோசம் செய் வாறாகில் அவர்கள்

64 வழிவம்ச றாஜா(ங்க)ங்களை இழந்து தாய் தந்தை குருக்களைக் கொன்ற பாவ

65 மும் காறாம் பசு தோசத்துக் காழாகி தீரா நரகத்திலழுந்து வார்கள் யென்று இந்

66 த ஒரு பட்டாவில் மூன்று பேர்களும் மதுரை மீனாக்ஷி சொக்க நாதர் சுறுளி முப்

67 பத்தி முக்கோடி தேவர்கள் நவக்கிரகங்களாணைப்படி ஆகாய வாணி சரஸ்வதி யரிய

68 பஞ்ச பூத சாச்சியாய் நான் கொடுத்த பட்டயம் இதை நிலை நிருத்துபவர்கள் றாஜாங்கம்

69 நீடுளி வாழ்கயென்று பாண்டியனுக்குப் பிந்தி இரண்டாவது நா. விசுநாதவநா

70 யக்கரவர்கள் கையொப்பம் உத்திரவுயெளுதியது முத்து வேலாசாரி

அடிக்குறிப்புகள்

1. செப்பேடு வைத்திருப்பவர் முகவரி: திரு கே. கனகராஜ், 5/3 பெருமாள் கோயில் சாலை பெத்தணன் செட்டிசந்து, போடிநாயக்கனூர், மதுரைமாவட்டம்.
2. அ.கி.ப. மதுரை நாயக்கர் வரலாறு பக். 98
3. இதுவுமது-பக். 103
4. மறவர் நலகண்டம் கொடுத்தலை ஒப்பிட்டுப் பார்க்க
5. தமிழகம், தொல்பொருள் ஆய்வுத்துறை வெளியீடு
6. A.R.E. No. 422, 423, 425, 425, 426, 427 of 1907
7, 8. A.R.E. 424 of 1907
9. தமிழகம், தொகுதி II பகுதி III பக். 32

---

# 10 - ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு

இத்துறையால், தென்னார்க்காடு மாவட்டம் திருக்கோயிலூரைச் சுற்றியுள்ள பகுதிகளில் தொல்பொருள் கள ஆய்வு நடத்தியபோது, பள்ளிச் சந்தம், காங்கேயனூர், செம்பை ஆகிய ஊர்களில் பழைய கல்செக்குகள் இருப்பது கண்டுபிடிக்கப்பட்டன.

செம்பை ஏரியில் புதையுண்டிருந்த ஒரு செக்கை வெளிக்கொணர்ந்த போது அதில் 10-ஆம் நூற்றாண்டுக் கல்வெட்டு ஒன்று பொறிக்கப்பட்டு இருப்பது அறியப்பட்டது. அதன் வாசகம் கீழ்வருமாறு காணப்படுகிறது:

''ஸ்வஸ்தி ஸ்ரீ கன்னையன் செய்த தருமம்
கழத்துவப் பட்டியும் பனைப் பாட்
டமும் மேரிக்கட்டின இவை நிறுத்தினானடி
யென் முடிமேலென''

இதில் கன்னையன் என்பவன், கழத்துவப்பட்டியும், பனைப்பாட்டமும் ஏரியும் தானமாக அளித்த செய்தி குறிக்கப்படுகிறது.

—ஆ. பத்மாவதி

# கன்னரதேவன் காலத்துச் செக்கு

ச. கிருஷ்ணமுர்த்தி
தொல்பொருள் அலுவலர், தருமபுரி

செக்குக் குறித்த கல்வெட்டுகளில் கன்னர தேவன் காலத்து கல்வெட்டும் ஒன்றாகும். மன்னன் பெயரும், ஆட்சியாண்டும் குறிப்பிடப்பட்ட அபூர்வமான செக்குக் கல்வெட்டுகளில் ஒன்றான இக்கல்வெட்டு மலைப்பாறையில் பொறிக்கப்பட்டுள்ளது. கல்வெட்டில் கீழ், பாறையிலே செக்கும் குடையப் பட்டுள்ளது. உரல் என்றும் 'உண்டாங்கல்லு' என்றும் பொது மக்கள் குறிப்பிடும் இக்கல்வெட்டு தென் ஆற்காடு மாவட்டம் செஞ்சி வட்டம் பின்னனூரில் உள்ளது. சேத்துபட்டு-செஞ்சி சாலையில் சேத்துபட்டிலிருந்து 3. கி.மீ. தூரத்தில் மரக்காணம் செல்லும் சாலையில் மலைகளுக்கிடையில் உள்ள பாறையில் இக்கல்வெட்டும் செக்கும் காணப்படுகிறது. தனிக்கல்லிலோ அன்றி மரத்திலோதான் செக்கு பார்க்கிறோம். ஆயின் இங்கு பாறையில் இருப்பது சிறப்பாகும். கச்சியும் தஞ்சையும் கொண்ட கன்னரதேவற்கு' எனக் கல்வெட்டில் உள்ளது. சோழர் காலத்து எழுத்தமைதியை எழுத்துக் களில் காணலாம். மன்னனின் ஆட்சியாண்டு எண்ணிலும் எழுத்திலும் உள்ளது. இம்மன்னனின் பல கல்வெட்டுகள் தொண்டைமண்டலத்தில் உள்ளன. திருவோத்தூர் உடையார் கோவிலில் கன்னரதேவனின் 27'-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டு இருப்பதை ஈண்டு சிந்திக்கலாம். 9, 10-ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த செக்குக் கல்வெட்டு ஒன்று வட ஆற்காடு மாவட்டத்தில் மணிக்கல் என்ற இடத்திலும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. எனவே தொண்டை மண்டலத்தில் உள்ள மற்றொரு செக்குக் கல்வெட்டு என்றும் இதனைக் குறிப்பிடலாம்.

செக்கு இடுவித்த கொடையாளர்கள் பலரும் வணிகராக இருப்பது போன்று கன்னரதேவன் காலத்து இச்செக்கும் வணிகன் ஒருவனால் அமைக்கப் பட்டுள்ளது. மானநம்பிரான் தணக்கன் மகூன் வா. னி. (ந) வணிய் இடுவிச்ச என்பதால் வணிகன் ஒருவனால் பொது உபயோகத்திற்காக இச்செக்கு இடுவிக்கப் பெற்றதென்று அறிகிறோம்.

கல்வெட்டில் காணப்படும் ஊர்களில் 'எயில்' இன்றும் அதே பெயரில் புகழ் வாய்ந்த ஊராகத் தென் ஆற்காடு மாவட்டத்தில் சேத்துப்பட்டு-மலைய னூர் சாலையின் இடையே இருக்கிறது. சமணர் போற்றும் ஊர்களில் இதுவும் ஒன்றாகும். செக்குக் கல்வெட்டு உள்ள இடத்திற்கு மேற்கே இந்த எயில் உள்ளது. சிங்கபுர நாட்டுக்கு மேற்கேயுள்ள எயில்வழி அந்நாளில் இருந்த பெருவழிகளில் ஒன்று எனலாம். சிங்கபுரம் என்ற ஊர் இன்றைய சிங்காவரமாக இருக்கலாம். புள்ளநல்லூர் அழிந்து போன ஊர் எனலாம்.

செக்கும் செக்கு குறித்த கல்வெட்டும் பொதுவாக ஊரின் நடுவிலோ அன்றி ஊரையொட்டியோ இருப்பதை நோக்கும் போது இக்கல்வெட்டு இருந்த இடத்திற்கு அருகில் ஊர் இருந்திருக்க வேண்டும். அவ்வூர் புள்ளநல்லூராக இருக்கலாம். இனி பின்னனூர், அருகில் இருப்பதால் புள்ளநல்லூருடன் தொடர்புபடுத்தலாம். அருகில் 'பிள்ளைதாங்கல்' மலையும் சமணப்படுக்கையும் உள்ளன. கல்வெட்டும் செக்கும் உள்ள பாறைக்கு எதிரில் கிழக்கில் புன்செய் நிலங்கள் உள்ளன. உழவர்கள் ஒவ்வோராண்டும் இங்கு ஏர் உழும்போது பழங்காலப் பானை ஓடுகளையும் செங்கற்களையும் பார்ப்பதாகக் கூறுகிறார்கள். கரிவரத கவுண்டர் என்பார் காசுகளும் கூடக் கிடைப்பதாகக் கூறுகிறார். தமிழக வரலாற்றில் இடைக்காலத்தைச் சேர்ந்த (சோழர் காலத்தை ஒட்டியது) பானை ஓடுகளும், கங்கை கொண்ட சோழபுரத்தில் கிடைத்ததை போன்ற அகன்ற பெரிய செங்கற்களும் கிடைக்கின்றன. 'விளக்கெண்ணெய்' 'ஆட்டி' என்ற சொற்களைக் கல்வெட்டில் பார்க்கிறோம். இன்றும் கூட பொதுமக்கள் இச்செக்கில் முத்துக்கொட்டை போட்டு எண்ணெய் பிழிவதைப் பார்க்கும் போது சுமார் 1000 ஆண்டுகளாகப் பயன்படுத்தப்பட்டு செக்கு இன்றும் தொடர்ந்து பயன்படுவது தமிழக வரலாற்றில் இச்செக்கின் தொன்மையைப் பறைசாற்றுவதாக உள்ளது.

கல்வெட்டு:

மஹா . . . னக்கதி விளக்
கெண்ண உ ண . . . ணி ஆட்டி
செக்கால்லட்டி பயா . க
கச்சியுஞ்தஞ்சையும் கொண்ட
ஸ்ரீ கன்னரதேவற்குயாண்டு 10 பத்(தா)
வது சிங்கபுர நாட்டு மிய் வழி
எயில் வழி புல்லநல்லூர் று மான நம்பினான் தணக்கன் மகன் வ
னி (ந) வணிய் இடுவிச்ச செக்கு.

★

# உபபீட்மும் அதிட்டானமும்

வே. இராமன்
ஸ்தபதி
தொல்பொருள் ஆய்வுத்துறை, தஞ்சாவூர்

## முன்னுரை

வானுயர எழுப்பப்படும் விமானம் அல்லது கோபுரம் மற்றும் பெரிய மண்டபங்கள் முதலானவற்றிற்கு ஆதாரமாக அமைவது "பீடம்" ஆகும். கோவில் கட்டிட அமைப்புகளில் ஆதாரமாக, அடித்தளப் பீடமாக அமைக்கப் பெறும் "உபபீடம்", "அதிட்டானம்" இவைகளைப் பற்றி இங்கு காண்போம்.

## அடி

கடவுட்பற்றுக்கொண்ட மனிதன் இறைவனுக்குத் தன்னையொத்த உருவமாக ஆலயத்தை அமைக்கின்றான். அதாவது கட்டிடப்பகுதிகளை அடி, கால், தோள், கழுத்து, தலை, முடி என மனித உடல் அமைப்பின் புறத்தோற்றத்தையே உவமையாகக்கொண்டு கருத்தும், கலையும் ஒருங்கிணைந்த சிற்பக் கட்டிடமாக உருவாக்குகின்றான். இக்கலைப்படைப்புக்கு ஆதாரமாக அமைவது, 'அடி" எனப்படும் 'உபபீடமும்', 'அதிட்டானமும்' ஆகும். இவ்வங்கங்களே பாதம், பிரஸ்தரம், விமானம் முதலானவற்றைத் தாங்கும் ஆதார பீடங்களாகும். இவற்றின் உயர அளவுமுறைகளைப் பற்றிக் கட்டிடச்சிற்ப நூல்கள்[1] நமக்கு விரிவாக விளக்குகின்றன.

## அளவு முறை

ஆலய அமைப்பில் நீளம், அகலம், உயரம் இவைகளை அளவிட பல முறைகள் இருப்பினும் அமையப்பெறும் இடத்தையும், சூழ்நிலையினையும் மனதிற்கொண்டு சிறந்த அளவினைக் கைக்கொள்ளவேண்டும். அவ்வாறு எடுத்துக்கொள்ளப்படும் அளவினைக் 'கால்புறவாய்' என்றும் கூறுவர். இந்த அளவின் மூலம் பாதச்சுவரின் உயரத்தைக் கண்டு அதிலிருந்து அதிட்டானம், உபபீடம் போன்றவற்றின் உயர அளவை கணக்கில் எடுத்துக்கொள்வது மரபாகும்.

## உபபீடம்

அதிட்டானத்திற்கு கீழ்வரும் அங்கமே உபபீடமாகும் கட்டிட அமைப்பில் உபபீடம் உன்னத தோற்றத்திற்காகவும், பலத்திற்காகவும், அழகிற்காகவுமே அமைக்கப்படுகிறது.[2] உபபீடம் இல்லாமலும் கட்டிடத்தை எழுப்பலாம்.

## அளவு முறைகள்

உபபீட வகைகளை 26 விதமாகச் சிற்பநூல்கள் விவரித்துக் கூறுகின்றன. ஒரே வகையான உபபீடத்தை அங்கங்களின் அளவில் சிறிது கூட்டி

குறைத்து உபபீடவகைகளை விரிவாக்கி சிற்ப நூல்கள் அறியத் தருகின்றன. இம்மாற்றங்களை உற்றுக்கவனித்தால் வர்க்கங்கள் உறுதியாக அமைவதற்கும், அழகிய தோற்றத்திற்காகவுமே அமைக்கப்பட்டுள்ளதென்பதனை அறியமுடிகின்றது.

உபபீட உயரமானது அதிட்டான உயரத்திற்குச் சமம். ஒன்றே முக்கால், ஒன்றரை, ஒன்றேகால், முக்கால், அரை பங்கு அளவு வரையிலும்,[3] அதிட்டான உயரத்தை 5 பாகம் செய்து 3 பாகம்[4] அல்லது 2 பாகம்[5] வரை உயரம் கொள்ளலாம். இருப்பினும் கட்டிடத்தின் உயரத்திற்கேற்ப அளவினை உத்தியாக எடுத்துக்கொள்வது சிறப்பாகும்.

வேறுபாடு

உபபீடத்திற்கும் அதிட்டானத்திற்கும் அமைப்பில் வேறுபாடுகள் பல உண்டு. உபபீட அமைப்பில் அதிட்டானத்தில் இடம்பெறும் ஜகதி, குமுதம் மகாபத்மம் போன்ற அங்கங்கள் இடம் பெறுவதில்லை. உபபீட கண்டம் உயர அளவில் கூடுதலாகக் கொண்டும் அமையும். இவற்றால் அதிட்டானத்திலிருந்து உபபீடத்தை வேறுபடுத்தி எளிதில் அறியலாம்.

அதிட்டானப் புறவாயினின்றும் நீட்சியாக உபபீடத்தை அமைக்கலாம்[6] இவ்வாறு தஞ்சைப் பெரிய கோயில் கட்டிட அமைப்பில் கையாளப்பட்டுள்ளதைக் காணலாம்.

அதிட்டானம்

இது பாதசுவருக்கு கீழே அமையும் அங்கமாகும். ஆலய அமைப்பில் அதிட்டானம் இல்லாமல் மேற் கட்டிடம் எழுப்பப்படுவதில்லை.

'தராதலம்', 'ஆதாரம்', 'தரணி', 'தலம்', 'புவனம்'[7], 'குட்டிமம்', 'ஆதியங்கம்',[8] என்று பலவகையாளப் பெயர்கள் அதிட்டானத்திற்கு குறிக்கப்படுகின்றன. அதிட்டானத்தைக் குறித்து சிற்பநூல்களில் 78 வகைகள் தனித்தனிப்பெயருடன் காணப்படுகின்றன.

அதிட்டான வகைகள்

அதிட்டானத்தில் 'பாதபந்தம்', 'பிரதிபந்தம்' என்ற இருவகைப் பிரிவுகள் உண்டு.[9]

பாதம் (தூண்) ஆலயத்தில் அமைக்கப்படும் பூமியின் மட்டத்திலிருந்து எழுப்பப்படுவது. அங்ஙனம் எழுந்த பாதத்தைச் சுற்றிலும் அலங்காரமாக வர்க்கங்கள் அமைவதால், இவ்வகை அதிட்டானத்தைப் 'பாதபந்தம்' என்று வழங்குவர்.

ஆலிங்கம், அந்தரி, பிரதி, வாஜனம் என்ற சித்துவர்க்கங்கள் ஒன்று சேர்த்து 'பிரதி' என்றழைக்கப்படுகின்றது. இந்த சித்துவர்க்கங்களைக் கொண்ட (பிரதிவரியை) அதிட்டானத்தைப் 'பிரதி பந்தம்' என்றழைப்பர். பாதபந்த அதிட்டானத்தில் இவ்வங்கம் இடம்பெறுவதில்லை.

உயர அளவுகள் ;

பாத உயரத்தில் பாதியை, அதிட்டான உயரமாகக் கொள்ளலாம்.[10] அல்லது உயரத்தின் பாதியளவை 6,7,8 பாகம் செய்து ஒரு பாகத்தைக் குறைத்தும் உயர அளவாகக் கொள்ளலாம்.[11]

பஞ்ச வர்க்கம்

அதிட்டானத்தில் உபானம், ஜகதி, குமுதம், கண்டம், பட்டிகை என்ற அங்கங்கள் இடம்பெறும். இதையே பஞ்ச வர்க்கம் என்பர்.[12]

ஆலய அமைப்பில் அதிட்டானம், பாதபந்தமாக இருந்தால் இவ்வங்கங்களில் ஏதேனும் ஒரு மட்டத்தில் 'கோமுகை'யை அமைக்கலாம். இம்மட்டங்களில் 'தளவரிசை', 'வாயில்' முதலானவற்றையும் அமைக்கலாம். ஆனால் பிரதிபந்தமாக இருந்தால் பிரதியின் மட்டத்தில்தான் கோமுகையை அமைக்க வேண்டும். வேறு மட்டங்களில் கோமுகை மட்டுமின்றி தளவரிசையோ, வாயிலோ அமைத்தல் கூடாது. பிரதிபந்த அதிட்டானத்தில் பிரதிசேதம் எக்காரணத்தைக் கொண்டும் செய்யக்கூடாதென சிற்பநூல்கள் வலியுறுத்துகின்றன.

கால் சுவர் புறவாயினின்றும் வெளியில் காணப்படும் நீட்சியை 'களத்தி' என்று சிற்பக் கலைஞர்களால் சொல்லப்படுகின்றது. அதிட்டானக் களத்தி பாதம்பந்தமாக இருப்பின் களத்தியின் அளவை இருபாகம் செய்து உபானகளத்தி இருபங்கும், குமுதக்களத்தி ஒரு பங்கும் அளவாகக் கொள்ள வேண்டும்.

இவற்றைப் பார்க்கும்போது அதிட்டானம் ஒன்றாயினும் இருவகைப் பிரிவுகளில் களத்தி கொள்வதிலும் தளவரிசைமட்டம் அமைப்பதிலும் வேறுபாடு இருப்பதை அறியமுடியும்.

வர்க்க பேதம்

தொடர்ந்து செல்லும் ஒரே வரியில் உள்ள வர்க்கத்தை உருவில் மாற்றம் செய்து அமைத்தலே 'வர்க்கபேதம்' எனக் கூறப்படுகிறது. சோழர் கலைப்பாணியில் வர்க்க பேதம், மிகச்சிறப்பாகக் கையாளப்பட்டிருக்கின்றது.

ஒரே கல்லில் எல்லா அங்கங்களையும் அமைத்தல் என்பது சிரமமான தொன்றாகும். ஆதலால் கற்களை பல பகுதிகளாகப் பிரித்து அமைப்பது இன்றும் வழக்கத்தில் இருக்கின்றது. அலங்கார வர்க்கங்கள் கொண்ட பகுதியை வெளிவாய் வரிக்கற்களாகவும், பின் பகுதியை உள்வாய் வரிக்கற்களாகவும் பிரித்து அமைக்கப்படுகிறது. இதனால் கற்களை ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு எளிதில் எடுத்துச்செல்ல ஏதுவாகின்றது.

ஆலய அமைப்பில் உள்ள அதிட்டானம்

சிற்ப நூல்கள் பலவிதமான அதிட்டானங்களைக் கூறியபோதிலும் சோழர்க் கலைப்பாணியில் ஒருசில அதிட்டானங்களையே காணமுடிகின்றது.

இவ்வகையில் இடம்பெற்றுள்ள அதிட்டானத்தில் பாதபந்தம் என்றும் ஒரு வகை. இவ்வகை அதிட்டானம், சோழரின் முற்பகுதி, இடைப்பகுதி, பிற்பகுதி கட்டிடக்கலையில் அதிகம் காணமுடிகிறது.

இதுவரை உபபீடம், அதிட்டான வகைகள், அதிட்டான பேதங்கள், முதலியவற்றைக் கண்டோம். சிற்பநூல்களில் கூறப்படும் எல்லாவகையான உபபீடங்களும், அதிட்டானங்களும் ஆலய அமைப்பில் கையாளப்பட்டு உள்ளதா என்பதனை மேலும் ஆராயவேண்டும்.

அடிக்குறிப்புகள்

1. சிற்ப நூல்கள் காஸ்யபம், மயமதம், மானசாரம், விஸ்வகர்மியம் முதலியன.
2. மயமதம் 13:161
3. மயமதம் 13:171
4. காஸ்யபம்
5. விஸ்வகர்மியம்
6. காஸ்யபம் 5:58
7. காஸ்யபம் 6:65
8. மயமதம் 14:182
9. காஸ்யபம் 6:172
10 காஸ்யபம் 6:69
11. காஸ்யபம் 6:71



---

# சுடுமண் பொம்மைகள்

இத்துறையின் தொல்பொருள் ஆய்வாளர்கள் தஞ்சை நகரில் அகழ்வாய்வு செய்வதற்கான இடத்தை தேர்ந்தெடுக்க தொல்லியல் மேற்பரப்பு ஆய்வை மேற்கொண்டனர். இந்த ஆய்வில் தஞ்சை பிரகதீச்சுரர் ஆலயத்திற்கு வடமேற்கில் உள்ள செக்கடிமேடு என்னுமிடத்தில் சிதைந்த ஆறு சுடுமண் ஆண் உருவங்கள் சேகரிக்கப்பட்டன. இவ்வுருவங்கள் அனைத்திலும் கழுத்துக்குப் மேற் பகுதியும் இடுப்புக்குக் கீழ்ப் பகுதியும் சிதைந்து உள்ளன.

செக்கடிமேட்டில் இச்சுடுமண் உருவங்களோடு இடைக் காலத்தைச் (சோழர் காலம்) சேர்ந்த கூரை ஓடுகளும், பானை ஓடுகளும் கிடைக்கின்றன. இச்சுடுமண் பொம்மைகள், 17, 18-ஆம் நூற்றாண்டு கலைப் பணியாக இருக்கலாம் எனக் கருதப்படுகிறது.

—சொ. சாந்தலிங்கம்

# திருக்கோயில் விமானம்

வி. இராமதாஸ்
ஸ்தபதி
தொல்பொருள் ஆய்வுத்துறை, இராமநாதபுரம்

கோயில்களின் கருவறையின்மேல் எழுப்பப்படும் ஒவ்வொரு அடுக்கும் விமானம் என்றும் ஸ்ரீ கோயில் என்றும் சிற்ப நூல்கள் கூறுகின்றன.

கோயில்களின் வாயிற்பகுதியில் எழுப்பப்படும் பகுதிக்குக் கோபுரம் என்று பெயர். விமானத்தை சாந்திகம், பௌஷ்டிகம், ஜயதம், அத்புதம், சர்வகாமிதம் என்று ஐந்து வகையாகப் பிரிக்கலாம்.

சாந்திகம் — அமைதியானது என்றும், பௌஷ்டிகம் — பருமனைக் கொடுக்கக் கூடியது என்றும், ஜயதம்—வெற்றியைக் கொடுக்கக் கூடியது என்றும், அத்புதம்—அற்புதத்தைக் கொடுக்கக் கூடியது என்றும், சார்வகாமிதம்—எல்லோராலும் விரும்பக்கூடியது என்றும் சிற்ப நூற்கள் கூறுகின்றன.

விமானங்கள்

1. போகவிமானம், 2. பத்ரவிமானம், 3. விசாலவிமானம், 4, சுவத்திகவிமானம், 5. கரவிமானம். 6. கண்டவிமானம், 7. தூங்கானை விமானம், 8. சுந்தவிமானம், 9. விருத்தவிமானம், 10. கல்யாண சுந்தர விமானம், 11. கோசலவிமானம், 12. பத்ய பத்ரவிமானம், 13. சுத்த விமானம். என பதிமூன்று வகையாகப் பகுப்பர். இந்த விமானங்களை மேலும் நாகரம், வேசரம், திராவிடம் என்று மூவகையாகவும் பிரிப்பதுண்டு.

நாகரம் எனப்படுவது சதுரவடிவமானது. வேசரம் எனப்படுவது வட்டமாகவும், நீண்ட வட்டமாகவும் அமையும். திராவிடம் எனப்படுவது எட்டு பட்டையாகவோ ஆறு பட்டையாகவோ இருக்கும். சதுர வடிவமாகக் கொண்டு அமைக்கப்படும் விமானத்தை சிவனுக்கும், வட்டமாகவோ நீண்ட வட்டமாகவோ கொண்டு அமைக்கப்படும் விமானத்தை திருமாலுக்கும் அமைப்பர். இந்தியாவின் வடபகுதியிலுள்ள கோயில்களின் அமைப்பை நாகரம் என்றும், தென்பகுதியில் உள்ள கோயில்களின் அமைப்பைத் திராவிடம் என்றும், இவ்விரண்டிற்கும் இடைப்பட்டதை வேசரம் என்றும் சிற்பநூல்கள் கூறுகின்றன.

உபானம் முதல் ஸ்தூபிவரை ஒரே கருங்கல்லினாலோ அல்லது மொத்தமாகச் செங்கல்லினாலோ கட்டப்பட்டால் அக்கோயிலைப் 'புருசஹர்மியம்' என்பர். கருங்கல் செங்கல் இரண்டும் சேர்த்து கட்டப்படும் கோயிலை 'ஸ்திரீ காந்தம்' என்று சிற்பநூல்கள் கூறுகின்றன. அஸ்திவாரத்தைக் கருங்கல்லிலும் அதன்மேல் செங்கல்லைக்கொண்டும் அதற்குமேல் மரம் கொண்டும் அமைக்கும்

கோயில் 'நபும்ச ஹர்மியம்' என்பர். முழுவதும் மரத்தினால் கட்டப்படுவது 'ஸ்திரீ ஹர்மியம்' என்பர்.

தளம்

பிரஸ்தரத்திற்குமேல் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட நிலைகள் அமைக்கப்படுவதுண்டு. ஒரு நிலை உள்ள கோவிலைச் சிறு கோயில் என்று அழைப்பர். கோயில்களின் நிலையைப்பொறுத்து அதாவது இரண்டு நிலை, மூன்று நிலை என்று விமானதளத்தின் உயரங்களைக் கூட்டிக்கொண்டே செல்லும் கோயிலை மகாபிராசாதம் என்று அழைக்கப்படுகிறது.

பல்லவர் காலத்திலிருந்து மூன்றாம் குலோத்துங்கன் காலம் வரை விமானங்கள் உயரமாகக் கட்டப்படும் வழக்கம் இருந்தது. பிற்காலப் பாண்டியர் காலத்திலிருந்து கோபுரங்கள்தான் உயரமாகக் கட்டப்பட்டு வருகின்றன. 8-ஆம் நூற்றாண்டின் மத்தியில் ஆண்ட நந்திவர்மன் காலத்தில் எடுக்கப்பட்ட சில கோவில்கள் காஞ்சியில் உள்ளன. அவனால் கட்டப்பட்ட வைகுண்டநாதர் கோயில் (பரமேச்சுர விண்ணகரம்) ஒன்றன்மீது ஒன்றாக மூன்று கருவறைகளைக் கொண்ட விமானமாகும். உத்திரமேரூர் சுந்தரவரதர் கோயிலின் விமானமும் இவ்வாறே அமைந்தது. தந்திவர்மன் காலத்தில் இது கட்டப்பட்டதாகக் கருதுவர்.




சிகரத்தின் உறுப்புகள்

1. ஸ்தூபி
2. மஹாபத்மம்
3. சந்திர மாலை
4. கட்டு மாலை
5. பலிகை பத்மம்
6. அலுங்கு
7. கோடிப் பாலை
8. அதோ பத்மம்
9. கண்டமாலை
10. ஊர்த்வ பத்மம்
11. தூக்குகோடு

சோழர் காலத்திற்குப் பின்னர் கோயிற் கட்டிட அமைப்பில் புதிய திருப்பம் ஏற்பட்டது. கி.பி. 12-ஆம் நூற்றாண்டிலிருந்து கோபுரங்கள் தனிச் சிறப்பைப்பெற்று உயர்ந்து காணப்படுகின்றன. கோயிற் கலையில் பிரஸ் தரத்திற்கு மேல் அமைக்கும் பகுதிகளுக்குக் கிரீவம் (கழுத்து) சிகரம் (தலை) குடம் (ஸ்தூபி) எனப்படும் பாகங்கள் அமைக்கப்படுகின்றன. இப்பகுதியில் அழகான முகபத்ரம், அகாரை, சாலை, முகசாலை, மற்றும் சிகரத்தில் மகாநாசி, அல்பநாசி, மகரபத்மம், சந்திரமாலை, கட்டுமாலை, அதோபத்மம், கண்ட மாலை, ஊர்த்வம், தூக்குக்கோடு முதலியவைகள் அலங்கரித்து விமானத்தை அமைக்கிறார்கள். (முன்பக்கம் படத்தைப் பார்க்க)

### மாடக்கோயில்கள்

மாடிபோல் அமைந்த கோயில்களை மாடக்கோயில் என்பர். ஒன்றின் மேல் ஒன்றாக ஒன்பது நிலைகளுடைய மாடக் கோயில்களைப்பற்றி சிற்ப நூல்கள் கூறுகின்றன.

### தூங்கானை மாடம்

யானையின் பின்பகுதிபோன்று அமைக்கும் விமானத்தையே ஹஸ்தி பிருஷ்ட விமானம் அல்லது கஜபிருஷ்டவிமானம் என்று சிற்ப நூல்கள் கூறு கின்றன. தூங்கானை மாடம் என்று தமிழில் வழங்கப்படுகிறது. திருக்கழுக் குன்றத்து பக்தவச்சல ஈச்சுரன் கோயில், திருவானைக்கா, திருவொற்றியூர், வடதிருமுல்லைவாயில், திருவேற்காடு, மகாபலிபுர சகாதேவ ரதம் போன்ற கோயில்கள் ஹஸ்திபிருஷ்ட விமான வகையைக் கொண்டவை.

### மிக உயரமான விமானங்கள்

மிகஉயரமான விமானமுடையது தஞ்சாவூர் பெரிய கோயிலாகும். அடுத்து உயரமும் கம்பீர அமைப்பும் உடையது முதல் இராசேந்திரன் கட்டிய கங்கைகொண்ட சோழபுரக் கோயில் விமானமாகும். மற்றொரு உயரமான விமான அமைப்பைக் கொண்டது திரிபுவனத்து கம்பகேசுரர் கோயிலாகும்.

# தமிழக ஆயுதங்கள்

எஸ். இராமச்சந்திரன்

அரும்பொருட்காட்சியகக் காப்பாளர், குற்றாலம்

கற்கால மனிதன், தன் உணவுக்காக விலங்குகளை வேட்டையாடிக் கொல்ல, கல்லாலும், எலும்பினாலும் ஆன ஆயுதங்களைப் பயன் படுத்தினான். பெருங்கற் சின்னங்களின் காலத்தோடு ஒப்பிடத்தக்க சங்க காலத்தில், மரத்தாலும் உலோகங்களாலும் ஆயுதங்கள் உருவாக்கப்பட்டன என இலக்கியங்கள் மூலமாக அறிகிறோம். உலோகங்களில் முதன்மையாக இரும்பு பயன்படுத்தப்பட்டது.

## வில்-அம்பு

வேட்டையை அடிப்படையாகக் கொண்டு வாழ்வு நடத்திய தமிழகக் குலக் குழுக்களிடையே வில்லும் அம்பும் முதன்மையான ஆயுதங்களாக இருந்தன. அண்டை நாட்டுடன் போரிட்டுப் பொருள் ஈட்டுதலை (கவர்தல்) ''வில்லேர் உழவு'' என அழைக்கப்பட்டது (புறம். 371). சிலை (குறிஞ்சிப். 158) சாபம் (பெரும். 121) ஆகிய சொற்களாலும் வில் அழைக்கப்பட்டது. அம்பு என்பது கணை என்றும் வாளி என்றும் (புறம். 371) அழைக்கப்பட்டது. அம்பறாத்தூணியைக் கணைத் தூணி (சிறுபாண், 238) என்றும் குறிப்பிட்டனர். இதனை உரையாசிரியர்கள் ஆவ நாழிகை என்று குறிப்பர்.

மலார் (மிலாறு) வில்லில், உடைமுள் செருகிய ஊகங்கோல் அம்பாகப் பயன்படுத்தி எய்யப்படும் வழக்கு சங்க காலத்திலிருந்தது (புறம் 324). மற்றும் கல்வைத்து அடிக்கும் கவண் (மலைபடு. 206) என்ற கவண்டிலும் வழக்கிலிருந்து. இக்கவண்டில் தற்போது உண்டிவில் என வழங்குகிறது. கொம்பு ஊதுவது போல் வாயில் வைத்து ஊதிப் பறவைகளைக் கல்லால் எய்யும் 'சுங்குத்தான்' என்ற ஆயுதம் தமிழகத்தில் இப்போதும் குறவர் போன்ற இனத்தாரிடையே வழக்கிலுள்ளது.

## வேல்

இரும்பினால் செய்யப்பட்ட வேல், போர் வீரர்களுடைய முதன்மையான ஆயுதமாக நிலவிற்று. வீரர்கள், தம் வேல்களுக்கு உரிய புனிதச் சடங்குகள் செய்தும் (புறம். 95) உறையிலிட்டும் (புறம். 323) பாதுகாத்தனர். முருகனை வழிபடும் பூசாரியான வேலன் வெறியாடும் களத்தில் முருகனின் அடையாள மாக வேல் நடப்பட்டிருந்தது.

## குந்தம்

வேலோடு ஒத்த ஓர் ஆயுதம் குந்தம். ''பூந்தலைக் குந்தம்'' என்ற குறிப்பு முல்லைப் பாட்டில் (வரி. 41) உள்ளது. செங்குந்தர், முருகனின் ஆயுதமான

குந்தத்திலிருந்து தோன்றியவர்கள் என்றும், இம் மரபினரைச் சிறப்பித்து ''ஈட்டி எழுபது'' என்ற நூல் ஒட்டக் கூத்தரால் பாடப்பட்டதென்றும் கூறுவர். ஈட்டி, வேம்பத்தூரார் திருவிளையாடற் புராணத்தில் குறிக்கப்பட்டுள்ளது. *(39:19)* ஈட்டியை ''பாலா'' எனத் தஞ்சை மாவட்டத்தில் வழங்குவர். இது பிண்டிபாலம் என்ற சொல்லிலிருந்து தோன்றியிருக்கலாம். பிண்டி பாலம் என்பது எறியக் கூடிய ஆயுதம் என்று பெரிய புராணத்தால் அறிகிறோம். *(எறிபத்த. 30)* ஈட்டி முனையை வடமொழியில் 'பல்லா' எனக்குறிப்பர். இது தமிழில் 'வல்லையம்' என வழங்கிற்று. *(தம்பிமார்கதை,வரி. 349)*

## காழூன்று

காழூன்று கடிகை என்ற ஆயுதம் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படுகிறது *(ஊர்காண் 173)*. குத்துக் கோல் என்று உரையாசிரியர் இதற்குப் பொருள் கூறுவர். காழ் என்பது வேலின் கைப்பிடி (புறம். 354). கோடு என்று வேலின் பக்க விளிம்பு குறிப்பிடப்பட்டது. வாய், நுதி என்பன முளையைக் குறித்தன. காழுடன் வேலைப் பொருத்தும் ஆணி ''மடை'' எனப்பட்டது (புறம் 97).

## சலாகை

இரும்பினாலான சலாகா என்ற அம்பினைப் பற்றி அர்த்த சாஸ்திரத்தில் குறிப்பு உள்ளது.[1] தமிழகத்தின் சில பகுதிகளில், தெய்வங்களுக்காக் வேண்டுதலின் பேரில் உடலில் இரும்பினாலான கம்பிகளைக் குத்திக் கொள்ளும் வழக்கம் உள்ளது. இது சலாகு அல்லது அலகு என அழைக்கப்படுகிறது. சலாகை என இரும்புச் சங்கிலியையும் குறிப்பதுண்டு.

## வாள்

போர் வீரனை ''வாளேர் உழவன்'' என்று புறநானூறு (பா. 378) அழைக்கும். எஃகம் என்றும் வாள் அழைக்கப்பட்டது. வேல், பாய்ச்சுகிற கருவியாக இருந்ததெனில் வாள், வெட்டுகிற கருவியாகப் பயன்பட்டதெனலாம். பத்திரம் என்ற வகையைச் சேர்ந்த அகலமான வாள் (பட்டாக்கத்தி) கி.பி.9ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நடுகல்லில் குறிப்பிடப்பட்டுள்ளது (செங்கம் நடுகற்கள், தொடர் எண்: 1971/56). வாளின் கைப்பிடி ''பாலிகை'' எனப்பட்டது. *(சீவக மணமகள். 116)* இக்கைப்பிடி கைக்கவசம் (gauntlet) போன்ற வடிவில் அமைந்திருந்ததென்று கருதலாம்.

குறுவாள் என்பது ''குறும்பிடி'' எனப்பட்டது. தொடைப் பகுதியில் இதனை மறைத்துக் கொண்டு ஊர் காப்பாளர்கள் காவல் புரிவதாக மதுரைக் காஞ்சி (வரி. 637.) கூறும் ''சொட்டை'' என நச்சினார்க்கினியர் இதற்குப் பொருள் கூறுவார்.[2] கி. பி. 14, 15-ஆம் நூற்றாண்டளவில் விசயநகர அரசப் படைகளில் இடம் பெற்ற வடஇந்திய-இசுலாமிய வீரர்களின் தொடர்பால் இச்சொல் தமிழில் புகுந்திருக்கலாம். ''சோட்டா கடார்'', என்று குறுவாளை அழைப்பது வடஇந்திய மரபு. ''உகிர்'' என்பது ஒருவகைச் சொட்டை என்பர். *(வில்லி.பதினேழாம் போர். 156)*.

கதுவாய் வாள் என்ற தொடர் சங்க இலக்கியங்களில் பரவலாக இடம் பெற்றுள்ளது.[3] பிளவு பட்ட வாயை (முனையை) உடைய வாள் என்று பொருள் கொண்டால் உகிர் போன்ற ஒரு வகை ஆயுதம் என்று கொள்ளலாம். பிச்சுவாக்கத்தி என்பதும் இத்தகைய வகையைச் சேர்ந்த குறுவாளாக இருக்கலாம்.[4] அராபிய, மராட்டிய வீரர்களின் தொடர்பால் தமிழகத்தில் இவ் வகைப் புதிய ஆயுதங்கள் பல வழக்கத்துக்கு வந்தன. சமதாடு என்பது ஜமதார் என வழங்கும் மராட்டிய வாள் கையை மறைக்கும் கவசத்துடன் கூடியது. நேரான, இரு பக்கங்களிலும் கூரிய விளிம்புடைய, கூரிய முனை கொண்டது. குதிரைப் படை வீரர்களுக்கு ஏற்ற ஆயுதம் இது. சமதாடுக்கடாரி என்பது அதே வகையைச் சேர்ந்த குறுவாள். சிக்க கடாரி என்பது சிப்பு போன்ற பற்களை இரு விளிம்பிலும் கொண்டதென்று கருத முடிகிறது. "சூகா" என மராட்டிய வீரர்களால் அழைக்கப்பட்ட சூகக்கடாரி, பிச்சுவா வகையைச் சேர்ந்தது.[5] இத்தகைய ஆயுதங்கள் சிலவற்றைப் பற்றிக் கி.பி. 1620 ஆம் ஆண்டில் தஞ்சை அரசர் ரகுநாத நாயக்கரால் டென்மார்க் அரசருக்கு எழுதி யனுப்பப்பட்டுள்ள பொன்னோலையில் குறிப்புகள் உள்ளன.

### சுரிகை

சுரிகை என்ற சூரிக்கத்தி பற்றிச் சங்க இலக்கியம் குறிப்பிடுகிறது. (பெரும். 73) வாங்கு என்பது பிற்காலத்திய சுரிகை வகைக் கத்தியாகும். "தொடுறக்கத்தி" என்ற குறுங்கத்தி கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் வழக்கில் இருந்தது. இது "தொரடார்" என வடஇந்தியாவில் வழங்கிய, அழுத்தும் விசையால் திறந்துகொள்ளும் கத்தியாக இருக்கலாம்.

### கணிச்சி

கணிச்சி என்ற கூரிய ஆயுதத்தையுடைய கூற்றுவன், மரண காலத்தில் உயிர்களைப் பிணிப்பதாகப் புறநானூறு பாடும். (புறம்.195) எனவே கணிச்சி என்பது மாட்டி இழுக்கிற அங்குசம் போன்ற ஓர் ஆயுதமாக இருக்க வேண்டும் என்று தெரிகிறது. கணிச்சியைக் கூற்றுவன் சுழற்றி எறிவதாகப் புறநானூறு பாடுவதைப் (புறம். 42) பார்க்கையில், பாசம்-அங்குசம் பாசம்- சூலம் என்ற இணை (ஜோடி) நம் நினைவுக்கு வருகிறது. கணித்ர என்ற ஆயுதம் நிலத்தைத் தோண்டப் பயன்பட்டதாக வேதங்கள் பாடும்[7]. ஊர்க்காவலர்கள் நிலத்தை அகழப்பயன்படும் உளியுடன் திரிந்ததாக மதுரைக்காஞ்சி (வரி. 641) பாடுவதால் கணிச்சி என்பது இத்தகைய உளியாக (pick axe) இருக்கக்கூடுமென்று தோன்றுகிறது. குந்தாலி என்று அழைக்கப்பட்ட இவ் வுளி, நிலத்தைத் தோண்டிக் கிணறு முதலான நீர் நிலைகள் வெட்டுவதற்குப் பயன்பட்டதெனப் புறநானூற்று உரையால் அறிகிறோம்[8].

### மழு

மழு என்ற சொல் தீ என்ற பொருளில் தேவாரத்தில் பயன்படுத்தப் படுகிறது. பரசு அல்லது கோடரி என்றே பொதுவாக இதற்குப் பொருள் கொள்ளப்படுகிறது.

கொல்லனின் அரத்தால் அழகிய வாயுடையதாகச் செய்யப்பட்ட நவியம் (கோடரி) பற்றிப் புறநானூறு கூறும். ரம்பம் என்று வழங்கப்படும் அரம் ஈர்வாள் என்றும் வழங்கிற்று. வேதினம் என்பது இதற்குரிய சங்க இலக்கியச் சொல்லாட்சி (குறுந். 140).

**சூலம்**

முயல் போன்ற விலங்குகளை வேட்டையாடச் சூலம் பயன்பட்டது ஆதிச்சநல்லூர் அகழ்வாய்வில் இரும்பினாலான சூலம் கிடைத்துள்ளது. சூலத்தில் யானை, புலி முதலிய விலங்குகளின் தலைகள் மாட்டப்பட்டிருந்ததாக வால்மீகி இராமாயணத்தில் (ஆரண்யகாண்டம்) ஒரு குறிப்பு உள்ளது. மேலும், வேட்டை நாயுடன் சித்திரிக்கப்படும் 'கதநாய் வடுகனான வைரவக் கடவுளின் கையில் சூலாயுதம் சித்திரிக்கப்படுவது மரபு. கழுக்கடை என்று பெரிய புராணம் (எறிபத்த. 30) குறிப்பிடும் ஆயுதம் திரிசூல வகையைச் சேர்ந்ததெனக் கருதலாம். தமிழகத்தில் இன்றும் பன்றி, அணில் ஆகியவற்றை வேட்டையாடுபவர்கள் சூலிகை (சுலுக்கி) எனப்படும் ஆயுதத்தைப் பயன்படுத்துகின்றனர். முனையில் அங்குசம் போன்ற கொக்கி உடைய, நீண்ட கம்பிவடிவிலுள்ள ஆயுதம் இது. குறிவைத்து எறிந்தால், தாக்கப்பட்ட விலங்கின் உடலில் குத்தி மாட்டிக்கொள்ளும். இச் சூலிகையும் சூல வகையைச் சேர்ந்த ஆயுதமே ஆகும்.

**தோட்டி**

அங்குசம், 'தோட்டி' என்று சங்க இலக்கியத்தில் குறிப்பிடப்படுகிறது. (புறம். 14). யானையைச் செலுத்தத்தோட்டி பயன்பட்டது. இது சூலிகை போன்றதேயாயினும் குத்துவதற்கன்றி, மாட்டி இழுப்பதற்கே உரியது.

**தண்டம்**

தண்டம் என்றசொல் தண்டனை என்ற பொருளில் புறநானூற்றில் (புறம். 10) பயன்படுத்தப்படுகிறது. தண்டிக்கின்ற அதிகாரத்தின் அடையாளமாகத் தண்டாயுதம் இருந்திருக்கவேண்டும். கூற்றுவனைத் 'தாடுடைய தருமனார்' எனத் தேவாரம் பாடும். நந்திகேசுவரரின் கையிலிருந்ததாக இலக்கியங்கள் குறிப்பிடும் வேத்திரப்படை (பிரம்பு) தண்டிக்கின்ற தன்மையுடையது. சண்டிகேசுரரைத் தண்டீசர் எனக் குறிப்பிடும் மரபு உண்டு. அதற்கேற்ப, தமது தந்தையை நோக்கிச் சண்டீசர் வீசிய ஆடு மேய்க்கும் கோல், மழுவாக மாறித் தந்தையின் கால்களைத் தறித்ததெனச் சேக்கிழார் பாடுகிறார். (பெரிய. சண்டேசர் பா.51.)

தண்டு என்ற ஓர் ஆயுதமும் பெரிய புராணத்தில் குறிக்கப்படுகிறது. 'எழுத்தண்டு' என்று இவ்வாயுதம் அழைக்கப்பட்டது. (வேம்பத்தூரார், திருவிளை. புராணம்: 39:19) எனவே எழு எனப்பட்ட கணைய மரத்தால் செய்யப்பட்ட, உலக்கை வடிவிலமைந்த தண்டாயுதம் இதுவெனத் தெரிகிறது. முசலம் என்ற ஆயுதமும் பெரிய புராணத்தில் குறிப்பிடப்படுகிறது. (எறி. 30) விவசாயக் கடவுளான பலதேவன் உலக்கை ஆயுதன் என்ற பொருளில் 'முசலி' என அழைக்கப்படுவான். முசலமும் தண்டாயுதம் போன்றே கணைய

மரத்தால் செய்யப்பட்டதென்பதை 'வல்லெழு முசலம்' என்ற தொடரால் அறியலாம்.

### விசைப் பொறிகள்

பலவகையான விசைப்பொறிகள் சிலப்பதிகாரத்தில் குறிப்பிடப்படும். 'வேட்டுவன் பொறியறிந்து மாட்டிய பெருங்கல் அடார்' என்ற புறநானூற்று வரிகளுக்கு (புறம். 19) 'வேட்டுவன் எந்திரமறிந்து கொளுத்திய பெரிய கல்லையுடைய இடியை ஒக்கும் அடார்' என உரையாசிரியர் பொருள் கூறுவார்.[9] இவ்வகை ஆயுதங்கள் 'யந்த்ரமுக்த' என அக்னி புராணத்தில் வகை செய்யப்பட்டுள்ளன. சீனநாட்டிலிருந்து கி.பி. 14-ஆம் நூற்றாண்டில் ஐரோப்பிய நாடுகளுக்கு வெடிமருந்து ஏற்றுமதியாயிற்று. அதற்குச் சமகாலத்தில், தமிழகத்தில், விசயநகரப் பேரரசனான குமார கம்பணனுக்கும் மதுரைச் சுல்தான்களுக்கும் இடையே நடைபெற்ற போரில் அக்னி யந்திரங்கள் பங்கேற்றன என மதுரா விசயம் என்ற நூலால் அறியலாம். அக்னி யந்திரம் என இங்குக் குறிக்கப்பட்டிருப்பது பீரங்கியே என்பது தெளிவு.

கி.பி. 16-ஆம் நூற்றாண்டுக்குப்பின் போர்ச்சுகீசியர் முதலிய வெள்ளை இனத்தாரின் தொடர்பால் பல வகையான பீரங்கிகளும், 'பந்தூக்' எனப்பட்ட துப்பாக்கிகளும் தமிழகத்துக்கு அறிமுகமாயின. குழல், குழல்வாய் எனப் பீரங்கி அழைக்கப்பட்டது. இராமன், இலக்குவன் என்று பெயரிடப்பட்டிருந்த இரு பெருங்குழல்களை ராமப்பையன் அம்மானை நமக்குக்காட்டுகிறது.[10] இத்தகைய வெடிமருந்து ஆயுதங்களின் நுழைவால், பழமையான தமிழக ஆயுதங்கள் வழக்கிலிருந்து வெளியேறின; காட்சிப் பொருட்களாயின.

### கேடய வகைகள்

சங்க இலக்கியங்களில் கிடுகு (முல்லை.41) பலகை (புறம்.345) தோல் (புறம். 300) ஆகிய சொற்கள் கேடயத்தைக் குறிக்கப் பயன்பட்டுள்ளன. தோல் என்பது ஆமையோட்டால் செய்யப்பட்டிருக்கலாம். சிவபிரானது மார்பில் எலும்பு, கொம்பு, ஆமையோடு ஆகியன திகழ்வதாகத் தேவாரம் (கோளறு பதிகம். 2) பாடுவது, ஆயுதங்களும், கேடயமும் என்ற வேட்டை நிலைச் சமுதாயக் கருத்திலேயே எனலாம். இந்தத் தோற் கேடயத்தில் கழிகள் பிணிக்கப்பட்டிருப்பதால் 'கழிப்பிணிக் கறைத்தோல்' எனக் குறித்தனர். (அகம். 24,67.) பலகையிலும் கழிகள் பிணிப்பதுண்டு (புறம். 345)

சீவக சிந்தாமணியில், போர்மயிர்க் கேடகம் (மயிர் அல்லது கம்பளம் போர்த்த கேடயம்) புளகத் தோற்புறம் (கண்ணாடி தைத்த, தோலாலான கேடயம்) வார்மயிர்க்கிடுகு (மயிரணிந்த, வார்ப்புக் கேடயம்) வள்ளித்தண்டை (பிரப்பங் கொடியாற் செய்த கேடயம்) நேர்மரப்பலகை (பலகைக் கேடயம்) முதலிய வகைகள் குறிப்பிடப்படுகின்றன. (மண்மகள். 117) கடகு, கிடுகு, பரிசை முதலான பலவகைகள் உரையாசிரியர் நச்சினார்க்கினியரால் குறிக்கப்படுகின்றன.

மான் கொம்பின் முனைகளில் இரும்புப்பூணிட்டுக் கேடயம் போலும் ஆயுதம் போலும் பயன்படுத்துவதுண்டு. 'மரு' என வடமொழியில் இத்

வழங்கும். தமிழகத்தில், இன்றும் இத்தகைய 'மடுவு விளையாட்டு' வழக்கிலுள்ளது. சிலம்பில் கூறப்படும் 'காழூன்று கடிகை' இத்தகைய பூணிடப்பட்ட கேடயவகையாக இருக்கலாம்[11]

## போர் உடைகள்

கவசம், படம், மெய்ப்பை என்ற சொற்கள் சங்க இலக்கியத்தில் ஆளப்படுகின்றன. 'புலிநிறக் கவசம்' என்ற புறநானூற்றுத் (புறம். 13) தொடருக்கு, 'புலியினது தோலாற் செய்யப்பட்ட மெய்புகு கருவி' என்று உரையாசிரியர் பொருள் கூறுவர்.[12] ஏனப்படம், கானப்படம், கிடுகின்படம் முதலிய கவச வகைகளைச் சிலப்பதிகாரம் (ஊர்காண். 172-3) கூறும். யவனர்கள் அணிந்திருந்த கவசம் மெய்ப்பை எனப்பட்டது. (முல்லை. 60) கவசத்தைச் சாலிகை என்றும் கருவி என்றும் சீவக சிந்தாமணி (மண்மகள். 116,113) கூறும். வீரர்கள் அணியும் மெய்புகு கவசம், அதள்புனையரணம் (glouse) அரியா யோகம் (belt) வளைதரு குழியம் (hat) முதலியனவும் சிலம்பில் (ஊர்காண். 173-5) கூறப்படும். 'வடிவுடைத் துகில்முடி' என்று தலைப்பாகையைச் சீவக சிந்தாமணி (மண்மகள். 112) கூறும். இத்தகைய பல போர் உடைகளையும், வீரகஞ்சுகம் போன்ற ஆடை அணிகலன்களையும் பற்றி, இலக்கியங்கள், கல்வெட்டுகள், நடுகல் முதலிய சிற்பங்கள் மூலம் பல விவரங்கள் கிடைக்கின்றன. அவற்றை ஒப்பிட்டு விரிவான ஆய்வு மேற்கொள்வது பயனுடையதாகும்.

### அடிக்குறிப்புகள்

1. G.N. Pant, Indian Archery - p. 154.
2. பத்துப்பாட்டு உ.வே.சா. பதிப்பு 1974 பக். 412.
3. கது என்ற சொல் பிளவு என்ற பொருளுடையது. அவ்வாறன்றிக் கதிர்வாய் என்பதே கதுவாய் எனத் திரிந்ததோ எனவும் தோன்றுகிறது. புறம்.347-இல் நான்காம் வரியிலுள்ள 'கதுவாய் வேல்' என்பதற்குக் 'கதுவாய் நேமி' என்ற பாடபேதம் உள்ளது. எனவே கதுவாய் என்பது, தீட்டப்பட்ட (sharp) முனை என்று பொருள் கொள்ளலாம்.
4. பிச்சுவா என்பது அரபுச் சொல்லாகக் கருதப்படுகிறது. ஆயினும் 'பிச்சாத்தி' என்ற நாஞ்சில் நாட்டு வழக்கினைக் கேட்கும்போது பிச்ச (தோகை) வாய்க்கத்தி என்பதே இதன் சரியான வடிவமாக இருக்க வேண்டும் எனத்தோன்றுகிறது.
5. சூகம் என்ற சொல் கதிர்களின் தோகையைக் குறிக்கும். இச்சொல்லின் அடிப்படையில் 'சூகக் கடாரி' என அழைக்கப்பட்டிருக்கலாம்.
6. G.N. Pant, 'Saga of Indian Arms'- Journal of Indian History, Golden Jubilee volume.
7. D.D. Kosambi, Introduction to the study of Indian History- Popular Prakasham-Bombay. 1975.
8. புறநானூறு உ.வே.சா. பதிப்பு-1971 பக். 37.
9. புறநானூறு-உ.வே.சா. பதிப்பு-1971-பக். 50
10. 'இராமப்பையன் அம்மானை' சரசுவதி மகால் பதிப்பு 1978 பக். 15.
11. சிலம்பு ஊர்காண். 173 குத்துக்கோல் என்று உரையாசிரியர் பொருள் கூறுவர்.
12. புறநானூறு உ.வே.சா. பதிப்பு-1971 பக். 35

★

# அன்னிய நாமகரணத்தீட்டு

சு. இராசகோபால்
கல்வெட்டாய்வாளர்

திருமலை நாயக்கர் அரண்மனை, மதுரை

'அன்னிய நாமகரணத்தீட்டு' என்பது ஒரு வகை ஆவணமாகும். நிலம் ஒன்றை விலைக்கு வாங்கும் ஒருவன் தன் பெயரில் வாங்காது மற்றொருவன் பெயரில் வாங்கிப் பெயரளவில் நிலம் வாங்கியவனிடமிருந்து பெற்றுக் கொள்ளும் ஆவணமாகும். தில்லையில் உள்ள மூன்றாம் குலோத்துங்கன், கோப்பெருஞ்சிங்கன் கால ஆறு கல்வெட்டுகள் [1] அன்னியநாமகரணத் தீட்டு, அன்னிய நாமகரணத்தால் கொண்ட நிலம், அந்ய நாமத்து விலை கொண்ட நிலம், அந்ய கர்மத்தீட்டு என்பதாகக் குறிக்கின்றன. திருவாரூரில் உள்ள ஒரு கல்வெட்டும், கோயில் தேவராயன் பேட்டையில் உள்ள மற்றொரு கல்வெட்டும் அந்யநாமத்தால் கொண்ட நிலங்களைப் பற்றித் தெரிவிக்கின்றன. 'அந்ய நாமகரணத்தீட்டு' என்ற ஆவணத்தைப் பற்றி விளக்கம் தரக் கூடிய செய்திகளை இக்கட்டுரையில் காண்போம்.

## தீட்டு

கல்வெட்டுகளில் இசைவுத்தீட்டு, நிலைமைத்தீட்டு, திரிவுத்தீட்டு, ஏவல்தீட்டு, விலைப்பிரமாணத்தீட்டு, விலைப்பிரமாண இசைவுத்தீட்டு, உபயத் தீட்டு என்று பலவகையாகத் தீட்டு என்ற ஆவணங்கள் காணப்படுகின்றன. 'தீட்டு' என்பதற்கு எழுது, வரை, பூசு என்று பொருள் இருந்தாலும் கல்வெட்டு களில் கையெழுத்திட்ட ஆவணம் என்ற பொருளிலேயே பல இடங்களிலும் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. பெயரிடுவதை நாமகரணமிடுதல் என்ற சொல்லால் கூறுகிறோம். பிறர் பெயரை இடுதல் அன்னிய நாமகரணம் என்றும், இப்படி இட்டது தொடர்பாக எழுதப்படும் ஆவணம் அன்னியநாம கரணத்தீட்டு என்றும், பொருள் கொள்ளலாம்.

பிறருடைய பெயரிட்டு நிலம் விலைக்கு வாங்குவது என்பது இன்றைய நடை முறையில் உள்ள 'பினாமி பத்திரங்களை' நினைவுபடுத்துகிறது என்றாலும் இது வேறுபட்டதாகும். உண்மையாக, 'பினாமி' பத்திரங்களில் வாங்கியவரின் பெயர் மறைக்கப்பட்டுவிடும். ஆனால் அந்ய நாமகரணத்தீட்டு களில் காசு கொடுத்து வாங்கியவரின் பெயரும், யார் பெயரால் வாங்கப் பட்டதோ அவரது பெயரும் தெளிவாகவும், வெளிப்படையாகவும் எழுதப் பட்டிருக்கும். மேலும் இவ்வகை ஆவணம் தன் பெயரால் வாங்கியதன் காரணமாக ஒருவன், தான்யாருக்காக வாங்கினானோ அவனுக்கு எழுதிக் கொடுக்கும் ஆவணமாகவும் உள்ளது.

### அம்மங்கையாழ்வார்க்கு அந்நிய நாமகரணத்தீட்டு

முதற்குலோத்துங்கச் சோழனின் மகள் அம்மங்கையாழ்வாரான பெரிய நாச்சியார் அடுத்தடுத்து வந்த அரசர்கள் காலத்திலும் வாழ்ந்து மூன்றாம் குலோத்துங்கசோழனின் காலத்திலும் வாழ்ந்துள்ளார். மூன்றாம் குலோத்துங் கனின் 5-வது ஆட்சியாண்டில் இவருக்கு ஒரு அந்யநாமகரணத்தீட்டு எழுதிக் கொடுக்கப்பட்டுள்ளது. (S. I. I. IV No. 226)

அம்மங்கையாழ்வார் மணலூர் என்ற ஊரில் மணல் கொல்லை நிலம் வாங்கினார். இந்த நிலம் திருச்சிற்றம்பலமுடையான் சங்கரனான தென்னவன் பிரம்மராயன் என்பவன் பெயரால் வாங்கப்பட்டிருந்தது இவன் அந்நிலத்தை அனுபவித்து வந்தான் என்றும் தெரிகிறது. இவன் பெயரில் அம்மங்கை யாழ்வார் வாங்கியது தொடர்பாக ஒரு அன்னிய நாமகரணத்தீட்டு எழுதிக் கொடுத்துள்ளான்.

முதற் குலோத்துங்கனின் (கி.பி. 1070-1126) மகள், மூன்றாம் குலோத்துங் கனின் 5-ஆம் ஆட்சியாண்டில் (கி.பி. 1183) நிச்சயம் நிரம்ப வயதானவராகத் தான் (சுமார் 70-75 வயது) இருந்திருப்பார். இதனைக் குறிக்கவே இவர் பெரிய நாச்சியார் என்று குறிக்கப்படுகின்றாரா? என்பது தெரியவில்லை. இவர் மற்றொருவர் பெயரால் நிலம் வாங்கியதற்கு இவர் வயதானவர் என்பது காரணமாக இருந்திருக்குமா? அல்லது இவர் சிதம்பரத்தில் இருக்காது வேறொரு இடத்தில் வாழ்ந்தது காரணமாக இருக்குமா? என்று சிந்திக்கத் தோன்றுகிறது. வயதானவர் என்பதால் நிலவிலை ஆவணம் இவர் பெயரில் எழுதப்படவில்லை என்றால் அந்த வயோதிகம் அந்யநாமகரணத்தீட்டு எழுதுவதற்கு தடையாக இருந்திருக்க வேண்டும். எத்தனையோ கல்வெட்டுகளில் தங்கள் இருப்பிடத் திலிருந்து வெகு தொலைவில் பலர், பல காலகட்டங்களில் நிலம் வாங்கிய செய்திகள் காணப்படுகின்றன.

### நந்திபன்மனுக்கு அந்நிய நாமகரணத்தீட்டு

இவன் சென்னைக்கருகில் உள்ள குன்றத்தூரைச் சேர்ந்தவன். இவ னுக்கு வெண்குளப்பாக்கக் கிழான் அரையன் தில்லைநாயகனான நந்திபன்மன் என்பது முழுப்பெயர். இவன் இரண்டாம் இராசாதிராசன் காலத்திலும் மூன்றாம் குலோத்துங்கச் சோழன் காலத்திலும் கல்வெட்டுகளில் காணப்படு கின்றான். இவன் சிதம்பரத்தில் உள்ள மூன்றாம் குலோத்துங்கனின் கல் வெட்டுப்படி (S.I.I. IV No.227) அரிச்சேரி, சாத்தங்குடி, மண்ணைக் கடந்தகன் நல்லூர் ஆகிய இடங்களில் $1\frac{1}{2}$ வேலி நிலம் விலைக்கு வாங்கியுள்ளான். தில்லை இறைவனுக்கு இந்நிலங்களை திருநந்தவனப்புறமாகவும் அந்த நந்தவனங்களை வளர்க்கும் குடிகளுக்கு சீவிதமாகவும் கொடுத்துள் ளான்.

மேற்சொன்ன மூன்று ஊர்களான அரிச்சேரி, சாத்தங்குடி, மண் ணைக் கடந்தகன் நல்லூர் ஆகிய ஊர்களில் உள்ள நிலங்கள் 4-ஆம் ஆட்சி

ஆண்டிலேயே வாங்கப்பட்டவை. அவை வாங்கும்போது காசு கொடுத்த போதிலும் தன்பெயரில் வாங்காது வாச்சியன் தேவன் நக்கன் என்பவன் பெயரில் வாங்கியுள்ளான். மன்னனின் 5-ஆம் ஆட்சி ஆண்டில் இவன் வாங்கிய எல்லா நிலங்களும் திருநந்தவனத்திற்கு கொடுப்பதால் வாச்சியன் தேவன் நக்கன் தன் பெயரில் உள்ள நிலங்களுக்காக அந்நிய நாமகரணத்தீட்டு எழுதி நந்திபன்மனுக்கு உறுதியளித்துள்ளான்.

கல்வெட்டின் முற்பகுதியில் நந்திபன்பன் யாரிடம், எந்தெந்தநிலம் எந்தெந்த எல்லை உடையவை, என்ன விலைக்குப் பெற்றான் என்பது தெளிவாகக் காட்டப்படுகிறது. அடுத்தபகுதியில் இறையிலி, மடக்கு, ஊர் காசில் பாதி வரி விதிப்பு ஆகியவற்றிற்காக அரசனிடம் ஒப்புதல் ஆணை பெறப்பட்டதும் கல்வெட்டப்பட்டதும் தெளிவாகப் பேசப்படுகிறது. மூன்றாவது பகுதியான அந்நியநாமகரணத்தீட்டுத் தொடர்பான செய்திகள் பொறிக்கப்படுவதற்கு முன் 'இந்நிலங்கள் அன்னியநாமகரணத் தீட்டுப்படி செம்போலை' என குறிக்கப்படுகிறது. செம்போலை என்ற சொல் செம்மையானது ஓலைகுற்றம், பிழையில்லாது எழுதப்பட்ட ஆவணம் என்பதை விளக்குவதாக உள்ளது. செம்பு ஓலை செப்பேட்டில் எழுதப் பட்டது என்று பொருள்கொள்வது கடினம். ஏனெனில் பொதுவாக அரசனளிக்கும் தானங்களே செப்பேட்டில் எழுதப்படுவது மரபு.

இந்த அந்நிய நாமகரணத்தீட்டில், 4-வது ஆண்டில் அன்ய நாமகரணத் தீட்டு ஒன்று எழுதிக்கொண்டு அதைத் தன் விருப்பம்போல் திருநந்தவனப்புற நிலமாகக் கொடுக்க நந்திபன்மன் உரிமை பெற்றிருப்பது தெரிகின்றது. இவன் மற்றொருவன் பெயரில் நிலம் வாங்கியதற்கு காரணம் என்ன? ஏதேனும் நிர்ப்பந்தம் இருந்திருப்பின் மூன்று ஊர் நிலங்களில் இரண்டைமட்டும் ஏன் மற்றொருவன் பெயரில் வாங்கினான் என்பது விளக்கம் பெற வேண்டியதாக உள்ளது.

### கோயில் கணக்கனுக்குக் கொடுத்த அந்நிய நாமகர்மத்தீட்டு

கோப்பெருஞ் சிங்கனின் 3-வது ஆண்டுக் கல்வெட்டு (S.I.I. VIII No. 706 பெரும்பற்றப் புலியூர் கவுணியன் சிவன் திருச்சிற்றம்பல முடையான் கோயில் கணக்கன் எழுதிக்கொடுத்த ஓர் அந்நியகர்மத்தீட்டையும், ஒரு திரிவுத் தீட்டையும் குறிப்பிடுகிறது.

மேற்படி கல்வெட்டில் கோயிலுக்காகப் பண்டாரத்திலிருந்து 37,000 காசுகள் கொடுத்து சிலநிலங்கள் வெவ்வேறு நிலக்காரர்களிடமிருந்து வாங்கப் பட்டது. என்பதும், அவை கவுணியன் சிவன் திருச்சிற்றம்பல முடையான் பேரால் வாங்கப்பட்டது என்பதும், பின்பு அது கோயில் கணக்கனுக்கு மாற்றிக் கொடுக்கப்பட்டது என்பதும் தெளிவாக உள்ளன.

இங்கும் வாங்கும்போது கோயில் பெயரில் (ஆதிசண்டேச்சுரர் பெயரில்) வாங்காது வேறொருவன் பெயரில் ஏன் வாங்கினார்கள் என்பதும் விளக்கம்பெற வேண்டியதொன்று.

### கேரள ராசன் விலை கொண்டநிலம்

மூன்றாம் குலோத்துங்கனின் ஒன்பதாவது ஆண்டில் கேரளராசன் என்பவன் பெரும்பற்றப்புலியூர் உழைச்சாணன் வடுகன் நட்டமாடி பேரில் அந்ய நாமகரணத்தால் பலர் பக்கல் நிலம் வாங்கியுள்ளான். அந்நிலங்களை நந்தவனத்திற்காகவும், அதன் குடிகளுக்காகவும் கொடுக்கப் போவதால் திருநந்தவனப்புற இறையிலி வேண்டியும், இந்நிலத்தைப் பாதி யாக மடக்கி அதற்கு ஊரார் தண்டநிச்சயித்த காசில் பாதியை ஊர்கணக்கில் கழித்துப் பாதிக் காசு மட்டும் வசூலிக்கவும் அனுமதி ஆணை பெற்றுள்ளான். இவன் அந்யநாமகரணத்தால் வாங்கியதற்காக உழைச்சாணன் வடுகன் நட்டமாடியிடம் அந்நியநாமகரணத்தீட்டு எழுதி வாங்கிக்கொண்டதாகச் செய்தியில்லை.

### பல்லவராயன் விலைகொண்ட நிலம்

கோப்பெருஞ்சிங்கனின் 11-வது ஆண்டுக் கல்வெட்டில் (S.I I. vol. VIII No. 716) வேணூர் கிழவர் கூத்தாழ்வாரான தனியாழிக் குடைக்குத் தரமோர நின்றான் பல்லவராயன் என்பவன் தன் காசுடன், சோழகோனின் காசும் சேர்த்து 18,000 காசுகளைக்கொண்டு சுமார் 19 மா நிலம் கவுணியன் சிவன் திருச்சிற்றம்பலமுடையான் பெயரால் அந்நிய நாமத்தில் விலை கொண்டுள்ளான்.

### கோயில் தேவராயன் பேட்டை-திருவாரூர்

இவ்விரு ஊர்களில் முறையே இராசகேசரியின் 3-ஆம் ஆண்டுக் கல் வெட்டும், இராசாதிராசனின் 2-ஆம் ஆண்டு கல்வெட்டும் அந்யநாம கரணத்தால் கொண்ட நிலம்பற்றிய செய்திகளைத் தருகின்றன.

### அந்யநாமகரணம் என்ன? ஏன்?

கோயில் இறைவனுக்குக் கொடையாகக் கொடுக்கப்படும் நிலங்கள்தான் மேற்கண்ட அனைத்துக் கல்வெட்டுகளிலும் குறிக்கப்படுகின்றன. நிலங்கள் இவை ஏன் அன்னிய நாமகரணத்தால் வாங்கப்படுகின்றன என்பது இன்னும் விளக்கம் பெறாத ஒன்று. பெரும்பாலும் கொடை கொடுத்தவர்கள் தில்லை யைச் சார்ந்தவர்கள் இல்லை. அதனால் பிறர் பெயரில் வாங்கியிருப்பார்களா? ஏற்கனவே சொல்லியபடி தொலைவான ஊரில் இருப்பது தங்கள் பெயரில் நிலம் வாங்குவதற்குத் தடையாக இல்லை. எத்தனையோ கல்வெட்டுகளில் ஒரு ஊரைச் சேர்ந்தவர்கள் பிற ஊரில் நிலம் வாங்கியுள்ளார்கள். ஒருவேளை ஏதேனும் வரிவிதிப்பிலிருந்து தப்பிக்க மாற்று ஏற்பாடாக இருந்திருக்குமா? நாம் பார்த்த கல்வெட்டுகளில் நிலம் வாங்கியவர்கள் பெரும்பாலும் அரச குடும்பத்தினர், அதிகாரிகள். இவர்கள் நேரே அரசனிடம் விண்ணப்பித்து இறையிலியும், வரிக்குறைப்பும் பெற்றிருக்கின்றார்கள். இது வரிவிதிப்பி லிருந்து தப்பிப்பதற்காகவும் இல்லை. பிறகு ஏன் அந்யநாமகரணத்தீட்டு?

திருவாரூரில் வாங்கப்பட்ட நிலம் முதலில் அன்னியநாமகரணத்தில் வாங்கப்பட்டு பிறகு திருப்பதியோது விளாகமாக மாற்றும்போது ஆதிசண்டேச்சுரர் பெயரில் திருநாமத்துக் காணியாக மாற்றப்பட்ட செய்தி கிடைக்கிறது. இது நமக்கு அன்னியநாமகரணம் என்பது என்ன என்பதற்கு ஒரு யூகத்தை ஏற்படுத்தக் கூடியதாக அமைகிறது.

பொதுவாக சிவன் கோயிலுக்கு வாங்கப்பட்ட நிலங்கள் திருநாமத்துக் காணி என்று குறிக்கப்படும். அதாவது திருநாமம் - இறைவன் பெயரில்-சண்டேச்வரர் பெயரில் வாங்கப்படுவது என்று பொருள். திருநாமத்தில் வாங்கப்படாது வேறு பெயரில் வாங்கப்படுபவை அன்னியநாமகரணத்தால் வாங்கப்படுபவை என்று பொருளாகிறது.

கோயில் பெயரில் வாங்கிக் கொடுப்பதால் கோயிலுக்கு ஆதாயம். அன்னியநாமகரணத்தால் வாங்குவதால் யாருக்கு ஆதாயம்? ஏன் இப்படிச் செய்யப்படுகிறது என்று பார்ப்போம். இதுவரை கண்ட கல்வெட்டுகளில் கொடை கொடுத்தவர்கள் அனைவரும் அரச குலத்தினர், சிற்றரசர், அதிகாரிகள் என்ற இடத்தைப் பெற்றவர்கள். அன்னியநாமகரணம் தந்தவர்கள் அந்தணர்கள். அதோடு கோயில் காரியங்களில் ஈடுபட்டு சமுதாய உயர்வு உடையவர்கள் அந்தணர்களுக்குக் கொடை கொடுப்பது அன்றைய சமுதாய,அரச குலத்தினரின் தர்ம அறநெறி. கோயில் காரியத்திற்காக வாங்கிய நிலங்களை உயர்குடியாகிய அந்தணர்கள் பெயரில் வாங்கியதால் என்ன கோயில் நிவந்தத்திற்காக வாங்கினார்களோ அந்த நிவந்தம் சரிவர நடப்பதோடு அந்த வரிவிலக்குப் பெற்ற நிலங்களால் குறிப்பிட்ட அந்தணர்களுக்கு அனுபவ உரிமையும் கிடைத்தது எனத் தெளிவாகிறது.

முடிவாக திருநாமத்தால் வாங்காது வேறு பெயரில் வாங்குவது அன்னியநாமகரணம்; இப்படிச் செய்வதால் அன்னியநாமகரணம் கொடுத்தவர்களுக்கு ஒருவகைத் தர்மமாக நில அனுபவ உரிமையும், நிவந்தம் நிறைவேற்றும் பொறுப்பும் கிடைத்தது; உண்மையில் காசு கொடுத்து வாங்கியவருக்கு பெயரளவில் வாங்கியவர் எழுதிக்கொடுக்கும் ஆவணமே அன்னியநாமகரணத் தீட்டு என்று கருதலாம்.

---

அடிக்குறிப்பு

1. S.I.I. Vol. IV No. 226, 227, Vol. III No. 86, 87 S.I.I. Vol. VIII No. 706, 716



# வெள்ளலூர்க் கல்வெட்டுக்கள்

நடன. காசிநாதன்
இயக்குநர் (பொறுப்பு)
தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை-28

கோயமபுத்தூர் மாவட்டம், கோயம்புத்தூர் வட்டத்தில் உள்ள வெள்ளலூர் வரலாற்றுச் சிறப்பு வாய்ந்த ஊராகும். இவ்வூரில் ஒரு சிவன் கோயிலும் ஒரு பெருமாள் கோயிலும் உள்ளன. சிவன் கோயில், மிகவும் சிறிய கருவறை அர்த்தமண்டபம் முகமண்டபம் ஆகியவைகளைப்பெற்று விளங்கு கிறது. இக்கோயிலிலிருந்து பத்து கல்வெட்டுக்களை மத்திய அரசு கல்வெட்டுத் துறை படி எடுத்துள்ளது.

இந்த ஊரில் உரோமானியர் காலத்துச் சில காசுகளும், அவர்களது அணிகலன்களும் கண்டெடுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் நான்கு மோதிரங்களும், வேலைப்பாடமைந்த இரண்டு மணிகளும், ஒரு தங்கத் தாம்பாளமும் குறிப்பிடத்தக்கவை.

மேலைக் கடற்கரை வழியாக வந்த வெளி நாட்டினர் தமிழகத்தின் உட்பகுதிக்கு வருவதற்குப் பாலக்கோடு கணவாயைப் பயன்படுத்தி யிருக்கின்றனர். அக்கணவாயின் மூலம் வந்தவர்கள் வெள்ளலூர் போன்ற பகுதிகளுக்கு வந்திருக்க வேண்டும் என்று ஊகிக்க முடிகிறது. அதன் காரணத் தால் தான் இவ்வூரில் மேற் கூறப் பெற்ற பொருட்கள் கிடைக்கின்றன என்று கருதலாம்.

இவ்வூர் சிவன் கோயிலைப் புதிப்பிக்கும் பணி அண்மையில் தொடங்கப் பெற்றது. அப்பணியின் தொடர்பாகத் திருச்சுற்றுப் பகுதி தோண்டப் பெற்றிருக்கிறது. அப்பொழுது இரு கற்கள் பூமியில் புதையுண்டிருப்பது தெரிய வந்தது. அக்கற்களை வெளியே எடுத்துப் பார்த்த பொழுது கல்வெட்டுக்கள் வெட்டப்பட்டிருப்பது தெரிய வந்தது. இக்கல்வெட்டுக் கற்களோடு சில உடைந்த சிற்பங்களும் பூமியிலிருந்து வெளிக் கொணரப் பட்டன.

ஒரு கல்லில் தமிழ் கல்வெட்டும், மற்றொரு கல்லில் வட்டெழுத்துக் கல்வெட்டும் காணப்பட்டன. எழுத்தமைதியைக் கொண்டு பார்க்கையில் வட்டெழுத்துக் கல்வெட்டு கி.பி. 9-ஆம் நூற்றாண்டையும் தமிழ் கல்வெட்டு கி.பி. 10-ஆம் நூற்றாண்டையும் சார்ந்ததாகத் தெரிகிறது.

ட்டெழுத்துக் கல்வெட்டு

1 ஸ்வஸ்தி ஸ்ரீ . . . [டின்] . . பன்
2 மர்க்கு எட்டாமாண்டைக் கெதிர் நாலாமாண்டு ந
3 [க்க]ன் மருதன் வெளிலூர்த் தென்னூர் நக்கநார்க்கு வெளிலூ
4 ர் ஊரார் கையில் விளக்கெரிக்க வைத்த ப
5 தின் கழஞ்சு பொன்னும் இவ்வாண்டு வரை நாற்[ப
6 தி ஆல்] நாள் போகங் கெட்டுக் கிடக்க அ
7 வன் மைத்துனன் ஊரன் முருகன் அப்பொன்
8 னிரட்டியாக ஊரார்கேய் இருபதின் கழஞ்சு பொ
9 ன் கொண்டு இவ்வூர் சவையார் கய்யிலே வைத்தது
10 இப்பொன்னால் ஒன்பது நாள் விழவுப்
11 பாடு உலகுஞ் சந்திராதித்தரல் உள்ள அ
12 ளவும் நொந்நா விளக்குச் சபையாரேய் எரிப்ப
13 தாக வைத்தான் ஊர் முருகன்

மிழ்க் கல்வெட்டு

1 ஸ்வஸ்திஸ்ரீ சந்ராதித்ய கு[லதில]க ஸா
2 ர்வபௌமநாகிய ஸ்ரீ கோக்கண்டன்
3 வீரநாராயணற்குச் செல்லா நி
4 ன்ற யாண்டு எட்டு எதிர் நாலு இவ்
5 வாண்டு வெளிலூர்த் தென்னூர் எம்பெ
6 ருமானடிகள் ஸ்ரீ கோ[யிலு] . . .
7 ரு நொந்தா விளக்குப் பகலெரிவதாக ப
8 ழங்காசினொடு . . . . . . . .
9 . . பன்னிரு கழஞ்சரை செம்பொன்
10 குடுத்தான் வெள்புரை நாட்டு மு . . . .
11 ந்த உ . . . [டே]சந்த
12 த்தான் சத்தி அரயன் இப்பொ[ன்]
13 னாற் [பொலி] கொண்டு இப்பரிசு பகல் நொ
14 ந்தாவிளக்கெரிப்பிப்பாரானார் (இவ்வூர்)
15 ஸபையார் ஸ்வஸ்திஸ்ரீ.

வட்டெழுத்துக் கல்வெட்டு பதிமூன்று வரிகளைப் பெற்றிருக்கிறது. ன்னன் பெயர் தொடங்கும் பகுதி சிதைந்து காணப்படுகிறது. மற்றப் குதிகள் தெளிவாக உள்ளன. மன்னனின் ஆட்சி ஆண்டு 8+4 என உள்ளது. க்கன் மருதன் என்பான் வெளிலூர்த் தென்னூர் நக்கநார்க்கு (சிவபெரு னுக்கு) விளக்கு எரிப்பதற்காக வெளிலூர் ஊராரிடம் பத்து கழஞ்சு பொன் ளித்திருக்கிறான். விளக்கு எரிக்கும் பணி சில காரணங்களால் நடைபெறாமல் ருக்கவே நக்கன் மருதன் மைத்துனன் ஊரன் முருகன் மேலும் பத்து கழஞ்சு பான்னை ஊராரிடம் அளித்து, சபையார் மூலம் கோயிலில் ஒன்பதுநாள் ழா நடைபெறுதலும், நொந்தாவிளக்கு எரித்தலும் உலகும், சந்திர சூரியன்

உள்ளவரையும் தொடர்ந்து நடைபெற ஏற்பாடு செய்ததை மற்ற பகுதிகள் புலப்படுத்துகின்றன. அறக்கொடை தொடர்ந்து செயற்படுதல் வேண்டும் என்பதைச் சந்திர சூரியர் உள்ளவரையும் என்று வழக்கமாகக் கூறுவதோடு உலகம் உள்ளவரையும் என்று சேர்த்திருப்பது கண்டு மகிழத்தக்கது.



தமிழ்க் கல்வெட்டு

தமிழ் எழுத்துக் கல்வெட்டு கோக்கண்டன் வீரநாராயணனின் எட்டின் எதிர் நாலாமாண்டில் அதாவது பன்னிரண்டாம் ஆட்சியாண்டில் எழுதப் பெற்றிருக்கிறது. வெளிலூர்த் தென்னூர் எம்பெருமானடிகள் (சிவபெருமான்) ஸ்ரீகோயிலுக்கு ஒரு நொந்தாவிளக்குப் பகலில் எரிப்பதற்காக பழங்காசு